## அந்தர்யோக விவரங்கள்

ராஜபாளையத்தில் 21—8—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண சேவாச்ரமம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 5-00 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

இராமநாதபுரத்தில் 21—8—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: அருள்மிகு சொக்கநாத சுவாமி ஆலயம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

கன்னியாகுமரி ஜில்லா—நாகர்கோவிலில் 21—8—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: தேசிக விநயகர் உயர்நிலைப்பள்ளி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்

கரூரில் 21—8—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: பசுபதிபாளையம் விவேகானந்த கல்விநிலையம்
நேரம்: மாலை 4-30 மணிமுதல் 7-00 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்

திருநெல்வேலி ஜில்லா—விக்கிரமசிங்கபுரத்தில் 28—8—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: சிவந்தியப்பர் கோவில்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்

கோவை ஜில்லா—சித்திரச்சாவடியில் 4—9—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த ஆச்ரமம்
நேரம்: காலை 10-00 மணி முதல் 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
உணவு வசதி: நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-00ம், மாலை சிற்றுண்டிக்கு 75 பைசா வும் செலுத்திச் சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

திருநெல்வேலி ஜில்லா—அம்பாசமுத்திரத்தில் 4—9—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி
நேரம்: காலை 9-30 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்

இராமநாதபுரம் ஜில்லா—அருப்புக்கோட்டையில் 4—9—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: L. S. P. K. பெண்கள் உயர்நிலைப்பள்ளி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

சக்கரம் 26 | பிங்கள ஹு ஆவணி மீ | ஆரம் 8

பொருளடக்கம் பக்கம்

| | | | |
|---|---|---|---|
| 1. | பிரார்த்தனை | | 281 |
| 2. | அருள் விருந்து | | 282 |
| 3. | பரமஹம்சர் புகட்டிய பெருநெறி விளக்கம் | | 283 |
| 4. | பராபரக் கண்ணி | | 286 |
| 5. | பரபோதம் | | 288 |
| 6. | என் குருநாதர் | | 290 |
| 7. | ஜீவபோதமும் பரபோதமும் | | 295 |
| 8. | ஸ்ரீ லலிதா வியாக்கியானம்–108 | | 300 |
| 9. | ஸத் ஸம்பாஷணை | | 303 |
| 10. | சுந்தரர் வாக்கு | வித்துவான் ஆதி. பாலசுந்தரன் | 305 |
| 11. | முக்தி நிலை | | 310 |
| 12. | தந்தை தாய்பேண் | சுவாமி துருவானந்தர் | 313 |
| 13 | ஹிருதய ஏக்கம் | சுவாமி ஆத்மானந்தர் | 317 |
| 14. | செய்திகள் | | 320 |

## சந்தா விவரம்

**1. ஆண்டு சந்தா ரூ. 10**

ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

**2. சகாய சந்தா ரூ. 5**

தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்து செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்து செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

**3. டிபாஸிட் சந்தா ரூ. 100**

ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்து விட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும் வரையில் மாதந்தோறும் தர்மசக்கர பத்திரிகை தங்களுக்கு வந்துகொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்தி புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும் பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00 வெளிநாடு வருட சந்தா ரூ. 20-00**

## அந்தர்யோக விவரங்கள் (தொடர்ச்சி)

**மதுரையில் 11—9—77 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: சிவானந்தர் தபோவனம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*

**மதுரை ஜில்லா—உசிலம்பட்டியில் 11—9—77 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: நாடார் ஸரஸ்வதி உயர்நிலைப்பள்ளி*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்*

**சென்னையில் 18—9—77 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: புரசவாக்கம் ஸர்.M.CT. முத்தையாசெட்டியார் மாணவர் உயர்நிலைப்பள்ளி*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*

---

அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும் தாய்மார்களும் அந்தர் யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும் பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.



प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.


| சக்கரம் 26 | பிங்கள ஹு ஆவணி மீ | ஆரம் 8 |
|---|---|---|


## பிரார்த்தனை

गुरुर्ब्रह्मा गुरुर्विष्णु गुरुर्देवो महेश्वरः ।
गुरुरेव परं ब्रह्म तस्मै श्रीगुरवेनमः ॥

குருர்பிரம்மா குருர்விஷ்ணு குருர்தேவோ மஹேச்வர: ।
குருரேவ பரம் பிரம்ம தஸ்மை ஸ்ரீகுரவே நம: ॥

ஞானச்சாரியரே மும்மூர்த்திகளாகிய பிரம்மா, விஷ்ணு, சிவனக இருக்கின்றூர். ஞானச்சாரியரே பரபிரம்மமாக இருக்கின்றூர். அத்தகைய ஞானச்சாரியருக்கு நமஸ்காரம்.

சொல்லிறப்பச் சற்குருவாய்த்
தோன்றிச் சுகம்கொடுத்த
நல்லவர்க்கே கொத்தடிமை
நான்காண் பராபரமே.

— தாயுமானவர்

# அருள் விருந்து

வீழ்ச்சிக்கு வித்து மடமை.

பேரன்பினின்று பெரிய தியாகம் வடிவெடுக்கின்றது.

வழங்க வழங்க மனிதனிடத்து மேன்மை வளர்கிறது.

ஆத்ம விழிப்புக்கு ஏற்ப மானுடன் மேலோன் ஆகிறான்.

எதினின்று உலகம் வடிவெடுத்ததோ அது இயற்கைத் தாய்.

ஒழுங்கின்மைக்கு இடம் தருமளவு அது மனிதனைக் கீழ்மையில் ஆழ்த்துகிறது.

வீரன் ஒருவனிடத்துக் கருணையும் கண்டிப்பும் சேர்ந்து அமைந்திருக்கின்றன.

ஒழுக்கம், அடக்கம், பணிவு ஆகிய மூன்றும் வாழ்வுக்கு உறுதுணைகள் ஆகின்றன.

சத்தியத்தைக் கடைப்பிடிக்கிறவனது வாழ்வு ஒரு நாளும் தோல்வியடையாது.

கசப்புக்கு இடம் தராது வேற்றுமையை எடுத்து விளக்குவது பண்பட்டவர் செயலாகும்.

பிறர்க்கு இடைஞ்சல் பண்ணாது உன்னுடைய பணிவிடையைப் பெருக்கிக்கொண்டே போ.

மனம் மொழிக்கு எட்டுவது பிரபஞ்சம். மனம் மொழிக்கு எட்டாது அவைகளை இயக்குவது ஆத்மா.

கோழைத்தனத்தினின்று மேன்மை வடிவெடுக்காது. பலதரப்பட்ட கீழ்மைகளையே அது விளைவிக்கும்.

வெறுப்பு விஷத்தை வளர்க்கிறது. அன்பு ஆக்கத்துக்கு அடிகோலுகிறது. கெட்டுப்போனவர்களை அது கைதூக்குகிறது.

சோம்பல், உழைப்பு, ஆகிய இரண்டும் வாழ்வை இரண்டு நிலைகளுக்கு எடுத்துச் செல்லுகின்றன. ஒன்று ஒடுக்குகின்றது. மற்றது எடுக்கின்றது.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

ஈசானனோடு பரமஹம்சர் மேலும் பகர்வாராயினர்: "உலகப் பற்றுடைய மாந்தன் ஒருவனுடைய புத்திமதி உனக்கு உதவாது. உலகப் பற்றுடையவன் பெரிய பண்டிதனாக இருக்கலாம். செல்வமும் ஆதிக்கமும் வாய்க்கப்பெற்றவனாக இருக்கலாம். அன்னவனுடைய அறிவுரை உனக்கு ஒருநாளும் பயன்படாது.

"கடவுள் பக்தியில் நீ பித்துப்பிடித்தவன் ஆவாயாக. ஈசானனுக்குக் கடவுள் பித்தம் பிடித்துவிட்டது என்று உலக மக்கள் பரிந்துரைக்கட்டும். உலகக் கடமைகளை யெல்லாம் ஒதுக்கித் தள்ளி வைத்து நீ பரநாட்டம் பூண்டிருக்கின்றாய் என்று உலகத்தவர்கள் உன்னிடம் அனுதாபம் காட்டுவார்களாக. அத்தகைய மனநிலையை நீ பெறுவாயாகில் பிறகு உலக மக்கள் தங்களுடைய வியவகாரங்களைப் பைசல் பண்ணிக்கொள்ளுவதற்கு உன்னிடம் எட்டிப்பார்க்க மாட்டார்கள். உன் பெயர் ஈசானன். அது சிவனாருக்குரியது. சிவனாரிடமிருந்து துறவை நீ கற்றுக்கொள்ளுவாயாக."

கடவுள் பக்தியில் அதிகம் கருத்தைச் செலுத்தவேண்டும் என்று பரமஹம்சர் ஈசானனுக்குப் பகர்ந்தருளினர். அதற்கு விடையாக ஈசானன் சாஸ்திரப்பிரமாணம் ஒன்றைஎடுத்து இயம்பினர். அதாவது: "ஓ தாயே! உன்னுடைய பக்தியில் பித்துப் பிடித்தவனாக என்னை அமைத்துவிடுவாயாக! தத்துவ விசாரம், யுக்தி முதலியவைகளால் எனக்கு ஆவதென்ன?"

பரமஹம்சதேவர்: "பித்து என்றல்லவா சொல்லுகின்றாய்! அதுதான் வேண்டப்படுவது! சிவனாதன் ஒருதடவை என்னிடம் கடவுளைப்பற்றி அதிகம் சிந்தித்தால் ஒருவனுக்குப் பித்துப் பிடித்துப் போகிறது என்று இயம்பினர். அதற்கு மறுமொழியாகப் பேருணர்வைப் பற்றியே ஒருவன் ஸதா சிந்திப்பதின் விளைவாக உணர்வை இழந்துவிட முடியுமா என்று கேட்டேன். கடவுளின் பாங்கை நாம் உள்ளபடி அறிந்திருத்தல் வேண்டும். அவர் நித்திய வஸ்து. புனிதமே வடிவெடுத்தவர். பேரறிவும் பேரானந்தமும் அவருடைய சொருபம். அவருடைய பேரறிவின்றே பொருள்களை அறிந்து கொள்ளுவதற்குரிய அறிவை மனிதன் பெறுகிறான். அவருடைய பேரறிவே உலகெங்கும் அறிவுமயமாய் இலங்குகின்றது. ஐரோப்பியர்கள் சிலர் கடவுளைப்பற்றி அதிகம் சிந்தித்ததின் விளைவாக அவர்களுக்கு மூளை கலங்கிப் போயிற்று என்று சிவனாதன் இயம்பினர். ஒருவேளை அவர்களுக்கு அங்ஙனம் நிகழ்ந்திருக்கலாம். ஏனென்றால் கடவுளைப் பற்றி நினைப்பதாக எண்ணிக்கொண்டு அவர்கள் உலக விஷயங்களையே அதிகம் எண்ணுகின்றனர். பாடல் ஒன்றில் ஒரு வரி இங்ஙனம் வருகின்றது: 'தெய்விகப் பேரார்வம் என்னுடைய உடலைப்பற்றிப் பிடிக்கிறது. ஞாபகம் இழந்தவனாக என்னை அது செய்கிறது.' ஈண்டு ஞாபகம் இழந்தவனாக என்னும் கூற்று உலக ஞாபகம் எனப் பொருள்படுகிறது."

ஈசானன் தரையின் மீதமர்ந்துகொண்டு பரமஹம்ச தேவருடைய பாதங்களைப்பற்றிப் பிடித்துக் கொண்டும், அவருடைய அருள் மொழிகளுக்குச் செவிசாய்த்துக் கொண்டும் இருந்தார். இடையிடையே ஆலயத்தின்கண் எழுந்தருளப்பண்ணியுள்ள காளிகாதேவியின் விக்ரகத்தின்மீது அவருடைய பார்வை பாய்ந்தது. தீப வெளிச்சத்தில் அம்பிகை புன்னகை பூத்தவளாகத் தென்பட்டாள். அன்னையின் சாந்நித்தியமே அந்த விக்ரஹத்தில் நிறைந்திருந்தது. பரமஹம்சதேவர் பகர்ந்தவைகளெல்லாம் வேதவாக்கியங்களுக்கு நிகர் எனக்கருதி அம்பிகை புன்னகை பூத்தவளாக இருந்தாள் போலும்.

ஈசானன் (அம்பிகையின் விக்ரஹத்தைக் குறித்துக் காட்டி): "தாங்கள் திருவாய் மலர்ந்தருளுகின்ற சொற்கள் யாவும் உண்மையில் அங்கிருந்து வந்துகொண்டிருக்கின்றன." பரமஹம்சருடைய பேச்சுவேறு, தெய்வத்திடமிருந்து வருகிற ஆதேசம் வேறு அல்ல என்பது அவருடைய கருத்தாகும்.

பரமஹம்சதேவர்: "நான் யந்திரம். அன்னை பராசக்தி அதைஇயக்குகின்ற யந்த்ரீ ஆவாள்.

நான் வீடு; அதனுள் குடியிருப்பவள் அவள். நான் ரதம்; அதில் ஊர்ந்துசெல்லுபவள் அவள். அவள் என்னை இயக்குவிக்கின்ற பிரகாரம் நான் இயங்குகிறேன். அவள் பேசுவிக்கின்ற பிரகாரம் நான் பேசுகிறேன். இக்கலியுகத்திலே கடவுளுடைய ஆதேசம் ஒரு குழந்தையினுடைய வாயினின்றோ, ஒருபைத்தியக்காரன் வாயினின்றோ, பரவசமடைந்துள்ள ஒருவன் வாயினின்றோ வருகிறது என்பது கோட்பாடு.

''மானுடனொருவன் குரு ஸ்தானத்தைவகிக்க முடியாது. இறைவனுடைய பேரருளாலேயே அனைத்தும் நிகழ்கின்றன. மஹாபாபங்கள், பல பிறவிகளில் செய்த பாபங்கள், குவிந்துள்ள அக்ஞானம் ஆகியவை யாவும் ஒரு கண் இமைப் பொழுதிலே கடவுளுடைய கிருபையால் அழிந்துபட்டுப்போகின்றன. அறை ஒன்று ஆயிரக்கணக்கான வருஷங்களாக இருள் சூழ்ந்து கிடக்கிறது. அந்த அறைக்குள்ளே எரிகிற தீபம் ஒன்றைக் கொண்டு வந்தால் இருளானது படிப்படியாக அகலுகிறதா அல்லது அந்த க்ஷணத்திலேயே அகலுகிறதா? வெளிச்சம் வருகிற அதே வேளையில் இருளானது அடிபட்டுப் போகிறது.

''மானுடனொருவன் எதைச் சாதிக்கவல்லவனாகிறான்? அவன் ஏராளமாகப் பேசலாம். ஆனால் நிகழ்வன யாவும் இறைவனுடைய திருவருளைப் பொறுத்திருக்கின்றன. வழக்கறிஞன் ஒருவன் நீதிமன்றத்தில் நவிலுவதாவது: 'விஷயங்கள் யாவையும் நான் உள்ளபடி எடுத்து இயம்பிவிட்டேன். இனி தீர்ப்புச் சொல்லுவது நியாயாதிபதியைப் பொறுத்ததாகிறது.' வழக்கறிஞன் தானே தீர்ப்புச் சொல்ல முடியாது.

''பிரம்மம் கர்மங்களுக்கப்பாற்பட்டது. சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய கிருத்தியங்கள் ஆதிசக்தியின் ஆதிக்கத்தால் நிகழ்கின்றன. இந்த ஆதிசக்தியின் அருளை வேண்டிக் கொள்ளுதல் வேண்டும். சாஸ்திரங்களும் அங்ஙனம்தான் இயம்புகின்றன. தேவர்களெல்லாம் ஆதிசக்தியைப் போற்றிப் பாடலொன்று பாடலானார்கள். அவர்கள் பாடி முடித்த பிறகே நாராயணன் தமது யோக நித்திரையிலிருந்து விழித்து எழுந்திருந்தார்.''

ஈசானன்: ''ஆம் ஐயனே, மது, கைடபன் ஆகிய அசுரர்கள் கொல்லப்பட்ட பிறகு பிரம்மாவும் ஏனைய தேவர்களும் இந்தப் பாடலைப் பாடினார்கள். சுவாஹாவாகவும், வஷத் ஆகவும், சுவதா ஆகவும் இருப்பவள் தாயே நீயே. மந்த்ரத்தின் உட்பொருளாயிருப்பவள் நீயே. அம்ருத சொரூபிணியாயிருப்பவள் நீயே. நித்தியவஸ்துவாயிருப்பவள் நீயே. சொற்களுக்கப்பால் இருப்பவள் நீயே. பிறகு மந்த்ரங்களாக அமைந்திருக்கின்ற சொற்களாக வடிவெடுத்திருப்பவளும் நீயே. தாயே சாவித்திரியாக நீ இலங்குகின்றாய். தோன்றியுள்ள யாவுக்கும் நீ ஆதாரமாக இருக்கின்றாய். இந்த ஜகத்தைத் தோற்றுவித்துள்ள ஜகன்மாதாவாக நீ இலங்குகின்றாய். அனைத்தையும் காத்தருள்பவள் நீயே. இறுதியில் அனைத்தையும் எடுத்து விழுங்குபவள் நீயே. சிருஷ்டி பண்ணுகின்ற பிராம்மணியாயிருப்பவள் நீ. அனைத்தையும் காத்தருள்கின்ற வைஷ்ணவியாய் இருப்பவள் நீ. அனைத்தையும் துடைத்துத் தள்ளுகின்ற ருத்ராணியாயிருப்பவளும் நீயே. மூன்று கிருத்தியங்களும் உன்னாலேயே நிகழ்ந்து வருகின்றன.''

பரமஹம்சதேவர்: ''இந்தப்பாடல்மிகநல்லது. இதன் உட்கருத்தை நீ கிரஹிக்க வேண்டும்.''

ஆசனத்தினின்று பரமஹம்சதேவர் எழுந்திருந்தார். அம்பிகையின் சந்நிதிக்கு எதிரே இருந்த மேடையின் மீது ஏறித் தம்முடைய நெற்றி தரையில்படும்படி அம்பிகைக்கு வணக்கம் செலுத்தினார். பக்தர்கள் அதிவிரைவில் அவரைச் சூழ்ந்துகொண்டு அவருடைய பாதங்களில் வீழ்ந்து வணங்கினார்கள். பக்திபூர்வமாக அவருடைய அனுக்ரஹத்தை நாடினார்கள். அவர் மேடையிலிருந்து கீழிறங்கித் தம்முடைய அறையை நோக்கி நடந்தார். திரும்பிப் போகும்பொழுது அவர் மகேந்திரரோடு உரையாடிக் கொண்டிருந்தார். அதற்கிடையில் அவர் பாடிய பாடலாவது: 'ஆசைக்கும் முக்திக்கும் நான் தலைவணங்குகிறேன் என்று பிரசாதர் பகருகின்றார்; பரப்பிரம்மமும் காளிகாதேவியும் ஒன்று என்னும் ரகசியம் எனக்குத் தெரியும். தர்மம் அதர்மமாகிய இரண்டையும் நான் நிரந்தரமாக ஒதுக்கித் தள்ளிவிட்டேன்.'

சம்பாஷணையைப் பரமஹம்சதேவர்

தொடர்ந்து நிகழ்த்தினர்: ''தர்மம் அதர்மம் என்பனவற்றின் உட்கருத்து உனக்குத் தெரியுமா? சாஸ்திரங்களில் விளக்கியுள்ள தெய்விகக்கிருத்தியங்கள் இங்கு தர்மம் எனப்பெயர் பெறுகின்றன. தானம் பண்ணுதல், ஊக்கம் படைத்திருத்தல், ஏழை எளியவர்களுக்கு உண்டி வழங்குதல் ஆகியவைகள் தர்மம் என ஆதரிக்கப்படுகின்றன.

''இத்தகைய தர்மங்களை அனுஷ்டிப்பது கர்ம மார்க்கம் எனப் பெயர் பெற்றிருக்கிறது. இது மிகக் கடினமான மார்க்கமாகிறது. சுய நல நோக்கமில்லாது கர்மம் புரிவது மிகக் கடினம். ஆதலால் பக்தி மார்க்கத்தைப் பின் பற்றுவது உசிதம் என இயம்பப்பட்டுள்ளது.

''மானுடனொருவன் தன்னுடைய இல்லத்திலே சிரார்த்த சடங்கை நிகழ்த்திக்கொண்டிருந்தான். பலர்க்கு அவன் அன்னதானம் பண்ணினன். அப்பொழுது கசாப்புக் கடைக்காரனொருவன் பசு ஒன்றைக் கொல்லுவதற்கு ஓட்டிக்கொண்டு போனன். களைப்பினல் அவனுக்குப் பசுவை அடக்கிச் செலுத்த இயலவில்லை. தனக்குத்தானே இயம்பிக்கொண்டதாவது: 'அதோ அந்த வீட்டில் சிரார்த்த சடங்கு நிகழ்ந்துகொண்டிருக்கிறது. ஆங்கு அவர்கள் வழங்குகிற விருந்தில் நான் கலந்து கொள்ளுகிறேன். அதனல் என்னுடைய உடலுக்கு உறுதி உண்டாகும். அதன் பிறகு இப் பசுவை இழுத்துக்கொண்டு போவது சாத்தியமாகும்!' அவன் எண்ணிய எண்ணத்தை நிறைவேற்றினன். பிறகு அவன் பசுவைக் கொன்றபொழுது கோ வதையினல் வந்த பாபம் சிரார்த்தம் பண்ணியவனுக்கும் உரியதாயிற்று. புண்ணியத்தையே தேடவேண்டுமென்கின்ற காமிய கர்மம் மிகக் கடினமானது. பக்தி மார்க்கம் காமியகர்ம மார்க்கத்தை விட மேலானது.''

மகேந்திரர் பின் தொடர்ந்து வருகையில் பரமஹம்சதேவர் தம்முடைய அறையினுள் பிரவேசித்தார். பாடலொன்றை அவர் தமக்குத்தாமே அடங்கிய குரலில் பாடிக்கொண்டிருந்தார். சற்று நேரத்துக்கு முன்புதான் ஈசானனிடம் உலகப்பற்றை ஒழிக்கவேண்டுமென்று அவர் வற்புறுத்திப் பேசிக்கொண்டிருந்தார். அந்த உணர்வு அவர்களுடைய உள்ளத்தில் இடம் பெற்றிருந்தது. அதற்கேற்ற பாடலொன்றை அவர் பாடினர்.

'தாயே, என்னுடைய உடைமைகளனைத்தையும் நீ அகற்றி விடுவாயாக. சிவனர் அணிந்திருக்கின்ற எலும்பு மாலை ஒன்று மட்டும் எனக்குரியதாயிருக்கட்டும்.'

சிவனர் தியாகராஜன் என்பதை அவர் அணிந்திருக்கும் எலும்புமாலை விளக்குகிறது.

தமது அறையிலிருந்த சிறிய கட்டிலின் மீது பரமஹம்சதேவர் அமர்ந்தார். ஆதாரும், கிஷோரியும், ஏனைய அன்பர்களும் தரையின் மீது அமர்ந்தார்கள்.

பரமஹம்ச தேவர் (பக்தர்களைப் பார்த்து): ''ஈசானனை நான் கவனித்துப் பார்த்தேன். ஆத்மசாதனத்தில் அவர் ஒன்றுமே பெறவில்லை. அதற்குக் காரணம் யாதுவாக இருக்கும் என நான் எண்ணிப் பார்த்தேன். ஐந்து மாத காலத்துக்குப் புரஸ்சரணம் என்னும் சாதனத்தை அவன் கையாண்டான். பக்தி சாதனத்துக்குத் தன்னை ஆயத்தப்படுத்துகின்ற செயல்கள் புரஸ்சரணம் என்னும் பெயர் பெறுகிறது. ஐந்துமாத காலம் அவன் அதைக் கையாண்டும் சிறிதளவாவது அவன் முன்னேற்றம் அடையவில்லை. சாதாரண ஆத்ம சாதகன் ஒருவனிடம் அது பெரிய மாறுதலை உண்டு பண்ணுகிறது. ஆனல் ஈசானன் பழைய ஆளாகவே இருந்து வருகின்றான்.'

ஆதார்: ''எங்களையெல்லாம் பக்கத்தில் வைத்துக்கொண்டு தாங்கள் ஈசானனை அங்ஙனம் திரஸ்கரித்தது பொருந்துமா?''

பரமஹம்ச தேவர்: ''ஏன் அங்ஙனம் பகர்கின்றாய்? அவன் ஜபம் ஏராளமாகப் பண்ணுகின்றான். திரஸ்கரிப்பதை முன்னிட்டு அவன் சஞ்சலப்படுவது பொருந்துமா?''

சிறிது நேரத்திற்குப்பிறகு பரமஹம்சதேவர் ஆதாரிடம் இயம்பியதாவது: ''ஈசானன் தயாள குணம் படைத்தவன். மற்றவர்களுக்கு வேண்டியவாறு எடுத்து வழங்குகின்றான். ஜபம், தவம் அவன் ஏராளமாகப்புரிகின்றான்.''

பிறகு பரமஹம்ச தேவர் மௌனமுற்றிருந்தார். பக்தர்களெல்லாம் அவரையே பார்த்த வண்ணமாயிருந்தார்கள். ''உன்னிடம் யோகம், போகம் ஆகிய இரண்டும் இடம்பெற்றிருக்கின்றன'' என்று பரமஹம்சதேவர் ஆதாரிடம் இயம்பினர்.

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது)

323. அண்ட பகிரண்டம்
அறியாத நின்வடிவைக்
கண்டவரைக் கண்டாற்
கதியாம் பராபரமே.

கதி — மோட்சம்.

அண்டம் பகிரண்டம் என்பன மூலப் பொருளாகிய பரமனுடைய வெறும் தோற்றங்களாம். இவைகள் எப்படித் தோற்றங்களாகின்றன என்பதற்கு உபமானம் வருமாறு: சூரியனிடத்திருந்து கிளம்பி வருகிற சூரிய கிரணம் வெட்டவெளியில் கட்புலனாவதில்லை. வானத்திலுள்ள நீர் நிறைந்த மேகத்தின் வழியாக அது செல்லும்பொழுது ஏழு நிறங்களை உடைய வான வில்லாக அது தென்படுகிறது. இந்த ஏழு நிறங்களைக் கண்டு ரசிப்பது மூல வெளிச்சத்தை ரசிப்பதற்கு நிகராகாது. அதே விதத்தில் பரம்பொருளைக் கால தேச நிமித்தம் என்னும் மாயா கற்பிதத்தின் மூலமாகக் காணும்பொழுது அது கட்புலனாகின்ற அண்டங்களாகவும், காட்சிக்கு எட்டாத பகிரண்டமாகவும் காட்சி கொடுத்துக் கொண்டிருக்கிறது. இக்காட்சிகளைக் காண்பது மூலப் பொருளின் காட்சியாகாது. மூலப்பொருளாயிருப்பது பரவஸ்து. அந்த மூலவஸ்துவானது கால தேச நிமித்தம் ஆகிய மாயாகாரியங்களின் விளைவாகக் கட்புலனாகின்ற அண்டங்களாகவும், காட்சிக்கு எட்டாத பகிரண்டங்களாகவும் இலங்கிக்கொண்டிருக்கிறது. மூலப்பொருளைக் காண்பது மெய்க்காட்சி. விகாரப்பட்டிருக்கின்ற அண்ட பகிரண்டங்களைக் காண்பது பொய்க்காட்சி. பரவஸ்துவை மூல நிலையில் சுவானுபூதியில் தரிசிப்பவர்களே மெய்ஞ்ஞானிகளாகிறார்கள். அந்த மெய்ஞ்ஞானிகள் பெயரளவில் தாங்கள் படைத்திருக்கின்ற ஜீவ வியக்தியைக் கருத்தில் வாங்காது பரபோதத்திலேயே திளைத்திருக்கிறார்கள். அவர்கள் இருக்கிற நிலையை உள்ளபடி அறிகிறவர்களும் அந்தப் பரஞானிகளுக்கு நிகராகிறார்கள். அங்ஙனம் பரஞானத்தை அபரோக்ஷ அனுபூதியில் அடையப் பெறுகிறவர்கள் பிரபஞ்ச வாழ்க்கையில் கட்டுண்பதில்லை. அவர்கள் ஜீவன் முக்தர்கள் ஆகின்றார்கள். ஜீவன் முக்தர்களைச் சரியாக அறிந்துகொள்ளுதல் பரம்பொருளை மூல நிலையில் அறிந்து கொள்ளுவதற்கு நிகராகிறது. ஆத்ம சாதகர்களாகிய நமக்கு இத்தகைய வாய்ப்பு அமைவது ஆகுக என்பது இக்கண்ணியின் கருத்து.

324. கலக்கமுற நெஞ்சைக்
கலக்கித் திரும்பத்
துலக்குபவன் நீயலையோ
சொல்லாய் பராபரமே.

அண்டத்தில் நிகழ்கிற அதே நிகழ்ச்சி பிண்டத்திலும் நிகழ்ந்து வருகிறது. தோற்றத்துக்கு வந்து இயங்கிக் கொண்டிருப்பது சிருஷ்டி காலத்தில் நிகழ்கிற நிகழ்ச்சியாகிறது. பிரளயம் வரும்பொழுது அகண்டமாய் விரிந்திருக்கும் அண்டம் தோற்றத்திலில்லாது ஒடுங்கிப் போகிறது. அதே நிகழ்ச்சி மானுடன் ஒருவனிடம் நாள்தோறும் நிகழ்ந்து வருகிறது. காலையில் அவன் எழுந்திருக்கிற பொழுது அவன் அனுபவிக்கிற உலகம் தோற்றத்துக்கு வந்து விரிவடைகிறது. விழித்திருக்கும் வேளையிலெல்லாம் திரிகரணங்களைக் கொண்டு கர்மம் செய்பவனாக அவன் அமைந்திருக்கிறான். இரவில் அவன் அயர்ந்து உறங்குகிறபொழுது திரிகரணங்களும் செயலற்றுக் கிடக்கின்றன. அவன் அனுபவத்தில் உள்ள உலகமும் மறைந்துபட்டுப் போகிறது. விழித்திருக்கும் வேளையில் அவன் செயல் சொருபமாக இருக்கிறான். அயர்ந்த உறக்கத்தில் அவன் செயலற்று இருக்கிறான். இப்படிச் செயல் புரிவதால் அவனுக்கு உண்டாகும் நலன் யாது? ஒரு பகற்பொழுதில் அவன் செய்யவேண்டிய கிருத்தியங்களை இனிது நிறைவேற்றினால் அவன் நிம்மதியாகத் தூங்கப்போகிறான். அன்றைய கிருத்தியம் நன்கு நிறைவேறாவிட்டால் அவன் கவலையோடு படுக்கப்போகிறான். ஆக, அவனுடைய நெஞ்சம் கலக்கமுற்றிருப்பதெல்லாம் அவன் எண்ணியுள்ள எண்ணத்தை நிறைவேற்றுதல் பொருட்டேயாம். இங்ஙனம் எண்ணிறந்த பிறவிகளில் மனம் கலங்கிக் கலங்கி அவன் மேன்மை

யடைந்து வருகிறுன். அவன் கலக்கமுற்று இருந்ததினுல் பலப்பல பயன்களே அடையப் பெற்றவனுனன். மனிதன் அடைகிற பயன்களில் எல்லாம் உச்சநிலேயில் இருப்பது பரமனே அடைதல் என்னும் பயனும். பரமனே அடைகின்ற பொழுது அவன் பரம திருப்தியடைகின்றுன். குறைநிலே என்னும் அழுக்கும் அவன் நெஞ்சை விட்டு அகன்று போகிறது. தூயதாகத் துலக்கப்பெற்ற தெள்ளிய நெஞ்சத்தைப் பெற்றவனுக அவன் மாறுகிறுன். இத்தனேவித கிருத்தியங்களுக்கும் தூண்டுதல் போடுபவன் இறைவன். அவனுடைய அருளால் பிரபஞ்ச வாழ்க்கையில் நெஞ்சம் கலங்கியிருந்து பிரபஞ்சாதீதத்தில் இறைவனுடைய சாந்நித்தியத்தில் நெஞ்சம் துலக்கப் பெற்றுப் பரமானந்தத்தில் திளேக்கப்பட்டிருக்கிறுன். இவையாவும் இறைவனுடைய திருவிளேயாடல்களாம். இறைவா, உன்னுடைய அருளால் நான் விரைவில் மனத் தெளிவு அடைந்து உன் சாந்நித்தியத்தில் திளேத்திருப்பேனுக என்பது இக்கண்ணியின் கருத்து.

325. சிந்தையும் என்போலச்
செயலற் றடங்கிவிட்டால்
வந்ததெலாம் நின்செயலா
வாழ்வேன் பராபரமே.

ஜீவனுடைய அமைப்பில் பிரகிருதி தத்துவமும், புருஷ தத்துவமும் சேர்ந்தே அமைந்திருக்கின்றன. இவை இரண்டையும் சாதனத்தின் விளேவாகப் பாகுபடுத்தத் தெரிந்து கொள்ளுகிறவனுக்கு முக்தி மிக எளிதில் வாய்க்கின்றது. பிரகிருதி தத்துவமும், புருஷ தத்துவமும் எப்படி ஒன்றில் ஒன்று பின்னிக் கொண்டு இருக்கின்றன என்பதை ஒரு சான்றின் மூலம் விளக்குவோம். தித்திக்கும் பாங்குடையது சர்க்கரை. சுத்த ஜலத்துக்குச் சுவை கிடையாது. ஆனல் சர்க்கரையைத் தண்ணீரில் போட்டுக் கலக்கினல் தித்திக்கும் பாங்கு தண்ணீருக்கும் வருகிறது. அதே விதத்தில் பிரகிருதியின் பாங்கைப் புருஷ தத்துவம் தன்னுடையதாக எடுத்துக்கொள்கிறது. அத்தகைய மயக்கமடைந்து பலப்பல கர்மங்களில் தான் கட்டுண்டு கிடப்பதாகப் புருஷதத்துவம் எண்ணிக்கொண்டு துயரத்துக்கு ஆளாகிறது. பிரகிருதியின் செயல் புருஷனேத் தொடமாட்டாது என்பதற்கு மற்ருெருசான்றை எடுத்துக் கொள்ளலாம். காசிக்கு யாத்திரை போகிற ஒருவன் இருப்புப் பாதை வண்டியிலமர்ந்து இருக்கிறுன். அந்த வண்டி ஓடுகிறது. உட்கார்ந்துகொண்டிருக்கிறமனிதன், 'நான் போகிறேன்' என்கிறுன். உண்மையில் போவது வண்டித் தொடர். உட்கார்ந்து கொண்டிருப்பவன் போவதாகப் பகர்கிறுன். வண்டியோடு வைத்தஇணக்கத்தின் விளேவு அது. வண்டியை விட்டு இறங்கித் தரையில் உட்கார்ந்து கொள்ளுவானுகில் அப்போது 'போகிறேன்' என்கின்ற செயல் அவனுக்கு உரியதாகாது. மனது என்னும் தத்துவம் பிரகிருதிக்கு உரியதாகிறது. அந்த மனதோடு தன்னேச் சம்பந்தப் படுத்திக் கொண்டிருப்பவன் ஜீவாத்மன். சாதனத்தின் விளேவாக மனதுக்கும் புருஷ தத்துவத்துக்கும்இடையிலுள்ளதொடர்பைப்பிரித்து வைப்பது சாத்தியமாகிறது. எண்ணிறந்த எண்ணங்கள் என்னும் விருத்திகள் மனதில் உதயமாகலாம். அந்த விருத்திகளேத் தன்னுடையவைகளென்று சஞ்சலப்படுபவன் ஜீவாத்மா. மனவிருத்திக்கும் தனக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லே என்று மனதுக்குச் சாட்சியாக இருந்து பழகுகிறவன் மனச் செயல்களுக்குப் பொறுப்பாளியாகமாட்டான். மனச் செயல்களினின்று தன்னேப் பிரித்து எடுத்துக்கொள்ள வல்லவன் தனக்கு அந்நியமாயுள்ள மனதின் செயல்களெல்லாம் இறைவனுடைய செயல்கள் எனப் பொருள்படுத்துகிறுன். செயல்கள் யாவும் இறைவனது திருவிளேயாடல்கள் எனப் பொருள் படுத்துபவன் அச்செயல்களில் ஒரு புனிதம் காண்கிறுன். இயற்கைச் செயல்கள் யாவும் உயிர்வகைகளேப் பண்படுத்துகின்றன. பண்பட்டுள்ள ஆத்ம சாதகனுக்கு இவ்வுண்மை விளங்குகிறது. பிறகு பிரகிருதிச் செயல்கள் எதிலும் அவன் குறை காண்பதில்லே. அத்தகைய நிலேயை எட்டியுள்ள ஆத்ம சாதகனுக்குப் பிரபஞ்ச வாழ்வு பந்தபாசமன்று; இறைவனுடைய ஆனந்தத் தாண்டவம் என விளங்குகிறது. இறைவா, மனச் செயலினின்று நான் விலகி அச்செயல்களெல்லாம் உன்னுடைய அருளால் நிகழ்கின்றன என்று இன்புற்றிருப்பேனுக என்பது இக்கண்ணியின் கருத்து.

# பரபோதம்

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரமானந்தரின் போதனை)

உன் மனதிலுள்ள குறை வெளியுலகில் குறை இருப்பதாகக் காட்டுகிறது. உன் மனதிலுள்ள குறையைப் போக்க முயலவேண்டும். மனதையாண்டும் தெய்வச் சிந்தனையில் இருக்குமாறு செய்துவிடுவாயானுல் உன்மனத்திலுள்ள குறைகள் நீங்கிவிடும். பாத்திரத்தைத் தினமும் துலக்குவதுபோன்றுமனதைத் தினமும்பிரார்த்தனையில் ஈடுபடுத்த வேண்டும். பிரார்த்தனைக்காகத் தனி அறை ஒன்றை அமர்த்திக்கொள். காலையிலும் மாலையிலும் அவ் அறைக்குள் சென்று ஜபம், தியானம், பிரார்த்தனை ஆகியவற்றை முறையாகச் செய்து வா. ஜபம், தியானம், பிரார்த்தனைக்காக உன்னுல் எவ்வளவு நேரம் ஒதுக்கமுடியுமோ அவ்வளவு நேரம் ஒதுக்கு. கடவுள் தியானத்தில் நீ எவ்வளவுக்கெவ்வளவு உன் மனதை ஆழ்ந்து போகும்படி செய்கிருயோ அவ்வளவுக்கவ்வளவு வாழ்க்கை உனக்குப்பயனுடையதாக அமையும். நிலையற்ற உலகசுகங்களில் உன்மனதை எவ்வளவுக்கெவ்வளவு பற்றுதல் கொள்ளும்படி செய்கிருயோ அவ்வளவுக்கவ்வளவு உன் மனதில் அசாந்தியை வளர்ப்பவனுகிருய். கடவுள் கருணுகரன். அவன் கருணைக்கு எல்லையே இல்லை. உன்னை நேர்மையான வழியில் செலுத்தும்படி அவனைப் பிரார்த்தனை செய்துகொள்.

இவ்வுலகத்திலிருந்து நீ பேரையும் புகழையும் தேடலாம். செல்வத்துக்கு நீ அதிபதியாகலாம், அவையாவும் உனக்கு மனச்சாந்தியைத் தரமாட்டா. கடவுள் வழிபாடு ஒன்றே உன் மனதுக்குச் சாந்தியைத் தரும். மனச்சாந்தி வேண்டுமென்ருல் நீ வழிபாடு செய்வதை நாள்தோறும் முறையாகச் செய்துவரவேண்டும். பஜனை, ஜபம், தியானம் ஆகியவற்றில் நீ எவ்வளவு நேரத்தைச் செலவழிக்க முடியுமோ, அவ்வளவு நேரத்தைச் செலவழி. தீவிரமாக இடையருது சாதனை செய்து வருவாயாகில் உன்னிடத்தில் கடவுள் விசுவாசமும், கடவுள் பக்தியும், ஞானமும் ஓங்கும். பலர் தீவிரமாகச் சாதனையில் ஈடுபடுவதில்லை. அரை மனதாகச் சாதனையில் ஈடுபடுபவர்கள் கடவுள் தத்துவத்தை உள்ளபடி அறிந்துகொள்ள முடியாது. கடவுளிடம் அவர்களுக்கு முழு விசுவாசமும் இருப்பதில்லை. அத்தகையவர்கள் கடவுள் அனுபூதி பெறமாட்டார்கள். அவர்களுக்குப் பேரின்பமும் கிட்டாது. தெய்வத்திடம் உண்மையான பக்தி செலுத்தாதவர்கள் தொடர்ந்து சாதனையில் ஈடுபடமுடியாது. அவர்களுக்குச் சாதனை செய்வது மிகக் கஷ்டமாகத் தோன்றும். சாதனை கஷ்டமாகத் தோன்றும்பொழுது, சாதனையைத் தொடர்ந்து செய்வதற்கு அவர்கள் விருப்பப்படுவதில்லை.

தெய்வத்திடம் பற்றுதலும், பக்தியும் இல்லாவிட்டால் மனம் துன்பமும் துயரமும் நிறைந்ததாகிவிடும். கடவுளுக்காகத் துயரப்படுகின்ற அளவு உன் மனம் சாந்தம் அடையும். மகிழ்ச்சியோடு சாதனையில் ஈடுபடு. உன் சாதனைக்கு வரும் இடையூறுகளை யெல்லாம் நீ வென்றுவிடுவாய். முழு மனதோடு சாதனையில் மூழ்கு. விடாமுயற்சியுடன் சாதனைசெய். எத்தகைய இடையூறு வந்தாலும், தடை ஏற்பட்டாலும் சாதனையை நிறுத்திவிடாதே.

உன் வாழ்வில் துறவு அல்லது தியாகம் வளரவேண்டும். துறவு அல்லது தியாகம் என்னும் உணர்வு இல்லாவிட்டால் கடவுள் எண்ணத்தை உன் உள்ளத்தில் தூண்டிவிட முடியாது. தியாகம் அல்லது துறவு மேலாம் வாழ்வுக்கு அவசியமானது. துறவு மனப்பான்மை இல்லாது சாந்தியைப் பெற முடியாது. விவேகமும் வைராக்கியமும் உன்னிடத்தில் உறுதியுடையவை ஆக ஆக நீ சாதனையில் முன்னேற்றம் அடைவாய். ஸ்ரீ ராமகிருஷ்ணர் விவேகமும்வைராக்கியமும்உடையவராகத் திகழ்ந்தார். அவர் வாழ்க்கை விவேகத்திற்கும், வைராக்கியத்திற்கும் விளக்கமாக அமைகின்றது. விவேகத்தையும், வைராக்கியத்தையும்பற்றிச் சில சாஸ்திரங்களில் நீ படித்திருக்கலாம். ஸ்ரீராமகிருஷ்ணர் இடத்தில் அவை வாழ்வு மயமாக வடிவெடுத்திருப்பதைப் பார்க்கலாம். உனக்குச் சாதனை செய்யும்பொழுது பல ஆத்மீக அனுபவங்கள் உண்டாகலாம். அவ் ஆத்மீக அனுபவங்களைக் கண்டவர்களிடத்திலெல்லாம் சொல்லக் கூடாது. சாதனை

செய்து வருகின்ற உனக்குப் புறத்தோற்றத்தில் மாறுதல் ஏற்படாவிட்டாலும் உன் அகத்தில் மாறுதல்கள் நிகழும். உன் அகம் திருந்தி அமைவதை நீ உணரலாம். மனம் திருந்தி அமைவது உனக்குத் தெரியும். உன் மனதின் நிலையை நீ அறிவதுபோன்று பிறர் அறிந்து கொள்ள முடியாது.

சாதனையில் ஆழ்ந்து செல்ல வேண்டும். பரந்த மனப்பான்மையைப் பெறவேண்டும். இமயமலையையும், பரந்த கடலையும், வெட்ட வெளியையும், காணும் பொழுது மனம் விரிவடைகின்றது. இயற்கையில் உள்ள பரந்த காட்சிகளைக் கண்டு பழகுவது நல்ல சாதனையாகும். மனதைப் பண்படுத்துவதற்குக் கடவுள் விசுவாசமும் கடவுள் பக்தியும் துணைபுரிகின்றன. கடவுள் பக்தி கடவுளிடத்துப் பற்றை வளர்க்கின்றது. கடவுள் பற்று ஓங்குமளவு உலகப்பற்று தானாகக் குறைகின்றது. உலகப் பற்று உள்ளத்தில் காமத்தை வளர்க்கிறது. காமத்திற்கு வசப்பட்ட மனத்தை அடக்குவது கஷ்டம். சாஸ்திரங்களை மட்டும் படித்தால் மனம் அடங்கிவிடாது. மனதிலுள்ள சிற்றுணர்வைப் பேருணர்வாக மாற்றும்பொழுதே மனம் அடங்குகிறது.

மூலாதாரத்தில் உறங்கிக் கொண்டிருக்கும் குண்டலினி சக்தி சாதனையின் மூலம் எழுப்பப்படுகின்றது. உடலிலுள்ள மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரம், என்னும் மூன்று ஆதாரங்களில் குண்டலினி சக்தி இருக்கும்பொழுது மனம் கீழான விஷயங்களில் ஓடிக்கொண்டிருக்கும். மணிபூர ஆதாரத்திற்குமேல் குண்டலினி சக்தி எழுப்பப்படும் போது மனமும் மேலான விஷயங்களில் செல்ல ஆரம்பிக்கிறது. குண்டலினி சக்தி முதல் மூன்று ஆதாரங்களை விட்டு மேலே வரும்பொழுது தான் ஆத்மீக விஷயங்களில் மனம் செல்லுகிறது. மனம் ஆத்மீக விஷயங்களில் செல்லும் பொழுதுதான் தெய்வீகக் காட்சி உண்டாகும். தெய்வீக விஷயங்களில் மனம் அப்பொழுது ஈடுபாடு உடையதாக இருக்கும். தெய்வீக மகிமைகளை எண்ணுவதிலும், தெய்வீக மகிமைகளைப் பாடுவதிலும், ஜபம் தியானம் செய்வதிலும் மனம் ஆனந்தம் அடைகின்றது. மனத்தில் இத்தகைய மாறுதல் ஏற்பட்டால் நீ சாதனையில் முன்னேறி வருகிறாய் என்பதற்கு அது அறிகுறி ஆகும்.

ஆத்ம சொரூபம் பலஹீனனால் அடையப்படுவது அன்று என்பது ஆப்த வாக்கியம். புத்தரைப் போன்று பலம் படைத்தவனாக இரு. புத்தருடைய தியாகத்தை எண்ணிப் பார். அவர் ஞானம் பெறுவதற்காக எத்தகைய மகத்தான தியாகம் செய்துள்ளார்! கடவுளுக்காக ராஜ போகத்தைத் துறந்தார். கடுமையான தவத்தை மேற்கொண்டார். ஆனாலும் அவருக்கு ஞானோதயம் உண்டாகவில்லை. இறுதியில் உறுதியான சங்கற்பம் செய்தார். புண்ணிய நதி ஒன்றில் நீராடி போதி மரத்தடியில் திட சங்கற்பம் செய்துகொண்டு நிஷ்டையில் அமர்ந்தார். "இந்தச் சரீரம் சுக்குச் சுக்காக நொறுங்கிப்போகலாம்; இமயமலை இடம் பெயரலாம்; கடல் வற்றிப் போகலாம்; மக்கள் யாவரும் ஒரே மனப்பான்மை உடையவர்களாக மாறி அமையலாம் —இவை எல்லாம் நிகழ்ந்தாலும் நான் ஞானம் பெறுவதற்கு முன்பு இவ்விடத்தை விட்டு நகர்வதில்லை" என்ற உறுதியான தீர்மானம் எடுத்தார். அவர் உறுதியைக் கலைப்பதற்கு அவர் மனதில் விகாரமான எண்ணங்கள் எழுந்தன. அவரை மயக்கச் சிற்றியல்பு அவருடைய உள்ளத்திலிருந்து மேல் எழுந்து வந்தது. அவற்றை எல்லாம் கண்டு அசையாது லட்சியத்தில் அவர் உறுதியுடன் இருந்தார்.

"எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்"

என்பது வள்ளுவர் வாக்கு. அக்குறளுக்கேற்ப புத்தர் திட எண்ணத்தோடு இருந்து ஞானோதயம் பெற்றார். புத்தர் போன்று நீ மன உறுதியுடன் சாதனையில் ஈடுபடவேண்டும். அத்தகைய மனவுறுதி வேண்டுமென்று இறைவனைப் பிரார்த்தித்துக்கொள். மனத்தளர்ச்சிக்கும் மனக்குழப்பத்திற்கும் ஒரு பொழுதும் இடம் தந்துவிடாதே. துறவும், தியாகமும், தூய்மையும் உன் உள்ளத்துக்குரிய பண்புகளாகட்டும். அத்தகைய பண்புகள் உன் உள்ளத்தில் இடம் பெறுகின்ற அளவு நீ உறுதியுடையவன் ஆகின்றாய். நெஞ்சில் உறுதியுடனும், உள்ளத்தில் நேர்மையுடனும் உன் வாழ்க்கையைக்கொண்டு செலுத்து. நீ இலட்சியத்தை அடைவாய்.

# என் குருநாதர்

( சுவாமி விவேகானந்தர் நியூயார்க் நகரில் நிகழ்த்திய சொற்பொழிவு )

[253 ஆம் பக்கத் தொடர்ச்சி]

கடவுளைக் காண வேண்டுமென்ற உணர்வு என் குருநாதரைப் பற்றிக்கொண்டது. சிறு வயதிலிருந்தே தன் முழு ஆற்றலையும் கடவுளைக் காணவேண்டுமென்ற செயலில் ஒன்று குவித்தார். ஒவ்வொரு நாளும் அவர் "தாயே, நீ இருப்பது உண்மைதானா? அல்லது அது வெறும் கவிஞர்களின் கற்பனையா? ஆனந்தமயமான அன்னை பராசக்தி கவிஞர்களின் கற்பனைகளில் இருக்கின்றாளா? அல்லது மக்கள் பொய் கூறி ஏமாற்றுகின்றார்களா? அம்பிகை என்று ஒரு சக்தி உண்மையில் இருக்கின்றாளா?" என்று கூறிப் புலம்புவார். நம்முடைய மனம் புத்தகக் கருத்துக்களையும் கல்வி என்று கூறும் இவ்வுலகப் பதிவுகளையும் உடையதாக இருக்கின்றது. அவருடைய மனமோ இவைகளில் எதிலும் கலக்கப்படாததாக இருந்தது. அவருடைய மனம் பிறருடைய கருத்துக்கள் எதையும் வாங்காது கலப்பற்ற தூய்மையுடையதாக இருந்தது. ஆதலால் அவருடைய மனதில் தூய எண்ணங்களே எழுந்தன. அவர் கல்விக்கூடம் செல்லவில்லை, ஆகையால் அவருடைய கருத்து சொந்தக் கருத்தாக இருந்தது. நம்முடைய வாழ்வில் பாதியைப் பள்ளிக்கூடத்திலேயே செலவழிக்கின்றோம். நம்முடைய மனதில் பிறர் கருத்துக்கள் சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்றன. அவரைப் பற்றி மாக்ஸ் முல்லர் என்னும் பெரியார் தம் கட்டுரையில் எழுதியிருப்பதாவது: பிறர் கருத்துக்களை ஏற்காத தூய்மையான சொந்தக் கருத்துடைய மனிதர் என் குருநாதர் என்பதையும், அதற்குக் காரணம் அவர் கல்விக்கூடம் சென்று பயிலாததே என்பதையும் குறிப்பிட்டிருக்கிறார். அவருடைய உள்ளத்தில் கடவுளைக் காணமுடியுமா? என்ற எண்ணம் முதன்மை இடம் பெற்றிருந்தது. நாளுக்கு நாள் அவ்வெண்ணம் உறுதிப்பட்டுக்கொண்டே வந்து கடவுளைத் தவிர வேறு எதையும் நினைக்க முடியாதவராக அவர் ஆகிவிட்டார். கடவுள் வழிபாட்டில் அவர் பித்தர் போன்று ஆனார். பூஜையை முறைப்படி செய்வது இயலாததாகப் போய்விட்டது. பூஜைமுறையின் விதிமுறைகளை அவரால் பின்பற்ற முடியவில்லை. தேவிக்கு நைவேத்தியம் படைப்பதை அவர் அடிக்கடி மறந்துவிடுவார். தீபாராதனை காட்டுவதையும் சில சமயம் அவர் மறந்துவிடுவார். இன்னும் சில சமயம் தம்மை மறந்தவராகத் தீபாராதனையைத் தேவியின் முன்னர் மணிக்கணக்காகச் சுற்றிக்கொண்டிருப்பார்.

"தாயே, நீ உண்மையில் இருக்கின்றாயா? நீ ஏன் என்னுடன் பேசாது இருக்கின்றாய்? நீ இறந்துவிட்டனையோ?" இங்ஙனம் அவர் ஒவ்வொரு நாளும் சொல்லிக்கொண்டே புலம்புவார். நம்மில் சிலருக்கு இத்தகைய மனநிலை சில சமயம் உண்டாய் இருப்பதை ஞாபகப் படுத்திப் பார்க்கலாம். பயனற்ற வாக்குவாதத்தாலும், பொருளற்ற புத்தகப்படிப்பாலும் சலிப்படைந்த மனம் இங்ஙனம் எண்ணுவதுண்டு. புத்தகப் படிப்பு அறிவு சம்பந்தமான அபினி ஆகின்றது. அதை அருந்தின் அறிவில் மயக்கம் உண்டாகின்றது. அவ் அபினி கிடைக்காவிட்டால் நாம் இறந்து போவோம். இதில் களைத்துப்போன நம் உள்ளம் "இவ்வுலகத்தில் நமக்கு வழிகாட்டுபவர்கள் ஒருவரும் இல்லையா? இறைவா! நீ இருப்பாய் ஆனால் எங்களுக்கு வழிகாட்டு. நீ ஏன் எங்களோடு உரையாடக் கூடாது? உன் தூதர்களை அனுப்புவதற்குப் பதிலாக நீயே எங்களிடம் ஏன் வரக்கூடாது? சண்டைகளும், குழப்பங்களும் நிறைந்துள்ள இவ்வுலகத்தில் நாங்கள் யாரைப் பின்பற்றுவது? யாரை நம்புவது? ஆண்பெண் என்ற வேறுபாடு இன்றி அனைவர்க்கும் உரிய கடவுள் நீயாக இருப்பாயானால் ஏன் எங்களிடம் நீ வந்து பேசாமல் இருக்கிறாய்? உன் குழந்தைகளாகிய நாங்கள் பக்குவம் அடைந்துவிட்டோமா என்பதை நீ ஏன் கவனிக்காமல் இருக்கிறாய்?" என்று எண்ணுகிறது. கஷ்டம் வரும்பொழுது இத்தகைய உணர்ச்சி ஒரு கணம் எழுந்து மறைந்துபோய் விடுகிறது. நம்மைச் சுற்றியுள்ள சூழ்நிலை அந்தஉணர்ச்சியை நம்மிடத்தில் மறைத்து

விடுகின்றது. சில சமயம் இன்பவாயில் திறக்கப்படுகின்றது. ஆனல் உடனே அது மூடப்படுகிறது. நம்மைச் சுற்றிலும் உள்ள சூழ்நிலையும் நம்முடைய விலங்கியல்பும் நம்மிடத்தில் உள்ள தெய்வீக உணர்வை மறைத்துவிடுகின்றன. தெய்வீக உணர்வு மறைந்ததும் நாம் கீழ் நிலைக்குச் சென்று விலங்கு மனிதர்கள் ஆய்விடுகின்ேறும். பருகுவதும், அருந்துவதும், இறப்பதும், பிறப்பதும் ஆகிய செயல்களைத் திரும்பத் திரும்பச் செய்கின்ேறும். ஆனல் நம்மில் சிலர் இதற்கு விதிவிலக்குடையவர்களாக இருக்கிறர்கள். ஒருமுறை அவர்கள் உள்ளம் நல்வழிக்குத் திரும்பி விட்டால் பிறகு எத்தகைய மனதைக் கலைக்கும் நிகழ்ச்சிகளும் அவர்களுடைய உள்ளத்தை நல்வழியில் இருந்தும் திருப்பி விடுவதில்லை. அவர்கள் சிறுமைகளை வென்று கடவுளைக் காண்பதில் தீவிரமுடையவர்களாக இருக்கின்றர்கள். சாவது நிச்சயம் என்றும், கடவுளை அடைவதில் மரணமடையலாம் என்றும் அவர்கள் உறுதி பூண்டிருக்கிறர்கள். உயர்ந்த லட்சியத்திற்காக உயிர் போகட்டும். விலங்கியல்பை வெல்லுவதைக் காட்டிலும் உயர்ந்த வெற்றி ஏது? பிறப்பு இறப்புகளையும், நலம் கேடுகளையும் வெல்லுவது உயர்ந்த வெற்றி அல்லவா!

இனி, என் குருநாதருடைய வாழ்க்கைக்கு வருவோம். கடவுள் பித்தேறி அவர் ஆலயத்தில் பூஜை செய்வதும் நின்று விட்டது. அவர் ஆலயத்திற்குப் பக்கத்தில் உள்ள அடவிக்குச் சென்று ஆங்கு வாழ்ந்து வந்தார். ஆங்கு வாழ்ந்திருந்த நாட்களில் உலகை அவர் அடியோடு மறந்துவிட்டார். சூரியன் உதித்ததும் மறைந்ததும் அவர் கவனத்திற்கு வரவில்லை. அவர் எப்படி வாழ்ந்தார் என்பதும் அவருக்குத் தெரியவில்லை. தம்மை அடியோடு மறந்தார். உணவு உண்பதையும் மறந்துவிட்டார். அக்காலத்தில் அவருடைய உறவினர் ஒருவர் அவருக்கு உணவு கொடுத்து அன்புடன் கவனித்து வந்தார். உண்ணுகிறேன் என்ற உணர்வு இல்லாது வாயில் வைத்த உணவை இயந்திரம் போன்று விழுங்கி வந்தார்.

இரவும் பகலும் இங்ஙனம் கழிந்து வந்தன. பகல் வேளை முடிந்து, மாலை வேளையில் கோவில் மணியோசை கேட்கும்பொழுது அவருக்கு மீளாத் துயரம் வந்துவிடும். ''மற்ெருரு நாளும் கழிந்து விட்டது. தாயே! நீ இன்னும் உன் காட்சியைத் தரவில்லை. என்னுடைய குறுகிய வாழ்நாளில் மற்ெருரு நாளும் கழிந்து விட்டது. நான் இன்னும் உன்னை அறியாதவனக இருக்கின்றேன்.'' இங்ஙனம் கூறிக்கொண்டு புலம்புவார். கடவுள் தரிசனம் கிடைக்கவில்லையே என்னும் துயரம் மேலிட அந்தத் துயரத்தைப் பொறுக்க முடியாது முகத்தைத் தரையில் போட்டுத் தேய்த்துக்கொண்டு இங்ஙனம் புலம்புவார். ''தாயே! அகிலாண்டத்திற்கும் நீ தாய் ஆவாய். என்னிடத்தில் நீ எழுந்தருள்வாயாக. எனக்கு நீ தான் வேண்டும். உன்னைத் தவிர எனக்கு வேறென்றும் வேண்டாம்.'' அவர் தம் லட்சியத்திற்கு ஒப்ப நடக்கலானர். அனைத்தையும் அன்னை பராசக்தியிடம் சமர்ப்பிக்கும்பொழுது தான் அவள் காட்சி தருவாள் என்னும் விஷயத்தைக் கேள்விப் பட்டிருந்தார். அன்னை பராசக்தி அனைவரிடமும் வருவதற்கு விரும்புகின்றள். ஆனல் மக்களோ அவளை அடைய விரும்பாது மூடத்தனமாக அற்பப் பொருள்களை அவளிடம் பிரார்த்திக்கின்றனர். அம்பிகையை அடைய விரும்பாது அற்ப சுகங்களை அனுபவிக்க விரும்புகின்றனர். எப்பொழுது எல்லாவற்றையும் ஒதுக்கித்தள்ளிவிட்டு அவள் மட்டும் வேண்டுமென்று விரும்புகின்றர்களோ அப்பொழுதே அவள்வந்துவிடுவாள். இங்ஙனம் அவர்கேள்விப்பட்டிருந்தார். ஆகையால்அந்தக் கருத்து மயமாகத் தம்மை ஆக்கிக்கொண்டார். அவரிடமிருந்த அனைத்தையும் அம்பிகையிடம் சமர்ப்பித்தார். பணத்தை இனி ஒரு பொழுதும் தொடுவதில்லை என்ற விரதமும் எடுத்துக் கொண்டார். ''நான் பணத்தைத் தொட மாட்டேன்'' என்ற எண்ண மயமாக அவர் ஆகிவிட்டார். அந்த எண்ணம் அவருடைய நாடி நரம்பெல்லாம் ஏறிவிட்டது. அதன் விளைவாக அவர் உறங்கும்பொழுது கூட அவரது மேனி காசைத் தொடமுடியாத நிலைமைக்கு ஆய்விட்டது. இதை நீங்கள் கேட்பதற்கு ஆச்சரியப்படலாம். அவர் உறங்கும் பொழுது அவருடைய உடம்பை நாணயத்தால் தீண்டுவேளுகில் அவருடைய உடம்பு உணர்ச்சியற்றதாய்ப் போய்விடும், காசாசை எவ்வளவு

கொடியதோ காமமும் அவ்வளவு கொடியது என்பதை அவர் அறிந்திருந்தார். மனிதன் ஆத்மா, அவன் ஆணும் அல்லன், பெண்ணும் அல்லன். காமமும் காசு ஆசையுமே மனிதனை அம்பிகை இடத்தினின்று பிரித்து வைக்கிறது என்று அவர் எண்ணினர். பிரபஞ்சம் முழுதும் அம்பிகையின் தோற்றமாக இருக்கிறது. அம்பிகை ஒவ்வொரு பெண்பாலின் சரீரத்திலும் வாழ்கின்றாள் என்று அவர் உணர்ந்தார். "ஒவ்வொரு ஸ்திரீயும் பராசக்தியின் தோற்றமாக எனக்குத் தென்படுகின்றார்கள். அவர்களை நான் எப்படிக் காம எண்ணத்தோடு பார்க்க முடியும்? இது அவருடையகூற்று. ஒவ்வொரு பெண்பாலரும் அவருக்கு அன்னை பராசக்தி ஆனார்கள். பெண்பாலர்களைக் காணும்பொழுதெல்லாம் அன்னை பராசக்தியைத் தவிர வேறு காட்சியை அவர் காணவில்லை. அவர் வாழ்வு முழுதும் இந்த எண்ணத்திலேயே ஊறி இருந்தார்.

மனிதனுடைய உள்ளத்தைப் பற்றிப் பிடித்துள்ள கொடிய நோய் காமம் எனலாம். என் குருநாதர் என்னிடம் பகர்ந்ததாவது: "குழந்தாய்! தங்கம் நிறைந்த ஒரு பை அறையில் இருப்பதாக வைத்துக்கொள்வோம். அவ் அறைக்குப் பக்கத்து அறையில் ஒரு திருடன் இருப்பதாக வைத்துக்கொள்வோம். அவனுக்குப் பக்கத்து அறையில் தங்கம் இருப்பது தெரிந்துவிட்டால் அவன் தூங்குவானா? அவன் தூங்கமாட்டான். எப்படி அந்த அறைக்குள் நுழைவது? அந்தத் தங்கத்தை எப்படிக் களவாடுவது? என்பதைப் பற்றியே அவன் மனம் எண்ணிக்கொண்டிருக்கும். அநித்திய உலகப் பொருள்களுக்கு அப்பால் நித்தியமாகிய கடவுள் இருக்கிறார் என்றும், அவர் சத்சொரூபமாகவும், பேரானந்த வடிவமாகவும், இருக்கின்றார் என்றும் அறிகின்றவன் அவரை அடைவதில் தீவிர நாட்டம் கொள்ளாதிருப்பானா? கடவுளிடம் இருந்து கிடைக்கும் பேரின்பத்திற்குப் புலன் இன்பம் நிகராகுமா? பேரின்பத்தைப் பெற நாட்டம் கொண்டவன் சிற்றின்பத்தில் திருப்தி அடைந்தவன் ஆவானா? பேரின்பத்தைப் பெற வேண்டும் என்ற முயற்சியைக் கணநேரமும் நிறுத்தி வைக்கமாட்டான். பேரின்பத்தைப் பெற வேண்டும் என்பதில் பைத்தியம் கொண்டவன் ஆவான்." இத்தகைய தெய்வப்பித்து என் குருநாதரைப் பற்றிக் கொண்டது. அப்பொழுது அவருக்கு குரு யாரும் இல்லை. அவருக்கு வழி காட்டித் தருவதற்கு ஒருவரும் இல்லை. அவரைப் பார்த்தவர்களெல்லாரும் பைத்தியக்காரர் என்று எண்ணினர்கள். இது உலகத்தவருடைய இயல்பு. ஒரு மனிதன் உலகத்தில் இருந்துவரும் வீண் பெருமைகளை எல்லாம் ஒழித்து விடுவானாகில் அவனைப் பித்தன் என்றுதான் உலகத்தவர்கள் கருதுவார்கள். ஆனால் அத்தகையவர்கள்தாம் உலகத்தை உய்விப்பவர்கள் ஆகிறார்கள். தெய்வப்பித்திலிருந்து உலகத்தை ஆட்டிப் படைக்கின்ற சக்தி வருகின்றது. எதிர்காலத்தில் உலகத்தை ஆட்டிப்படைக்கப் போகும் சக்தி ஆத்மசக்திதான்.

மெய்ப்பொருள் நாட்டத்தில் நாட்களும், வாரங்களும், மாதங்களும் கழிந்தன. அவர் இடைவிடாது மெய்ப்பொருள் நாட்டத்திலேயே ஈடுபட்டிருந்தார். தெய்வீகக் காட்சிகள் பல அவருக்கு வாய்த்தன. அவரைப்பற்றிச் சில ரகசியங்கள் அவருக்கு வெளியாயின. அவர் அறிவை மூடியிருந்த திரைகள் ஒன்றன்பின் ஒன்றாக நீக்கப்பட்டன. பராசக்தியே அவருக்குக் குருவாக இருந்து ஞானோபதேசம் செய்தாள். அந்தக் காலத்தில் கட்டழகும், கல்வித் திறமையும் வாய்க்கப்பெற்ற காரிகை அங்கு வந்தாள். அவ்வம்மையைப் பற்றி என் குருநாதர் பகர்ந்திருப்பதாவது:

"அம்மங்கை கல்வியே உருவெடுத்தவள் ஆவாள். கல்வி அம்மங்கையின் வடிவத்தில் மானுட வடிவம் தாங்கி வந்தது என்று பகரலாம்" இந்திய தேசத்தின் உயர்ந்த மனோபாவனையை நாம் இங்குக்காணலாம். இந்தியாவில் பெண்பாலர்களுக்கிடையில் கல்வி அறிவு குறைவு. அவர்களுக்குச் சுதந்திரமும் இல்லை. அத்தகைய சூழ்நிலையில் தெய்வீகப் பெண்களும் தோன்றுகின்றனர். என் குருநாதரிடம் வந்த அம்மையார் சந்நியாசினி ஆவார். பெண்பாலர்களிலும் சொத்துச் சுகத்தை எல்லாம் துறந்துவிட்டு மணம் முடித்துக்கொள்ளாது தங்கள் வாழ்நாள் முழுவதையும் தெய்வ வழிபாட்டுக்கே ஒப்படைத்தவர்கள் இருந்தார்

கள். என் குருநாதரைப் பற்றி அவ்வம்மையார் கேள்விப்பட்டு அவரைப் பார்ப்பதற்காக அந்த அம்மையாரே புறப்பட்டு வந்தார். அவ் அம்மையாரிடமிருந்துதான் ஆத்மீகத்துறையில் என் குருநாதர் முதன் முதலில் உதவி பெற்றார். அவ் அம்மையார் என் குருநாதரிடம் பகர்ந்ததாவது: ''குழந்தாய்! உனக்குப்பிடித்துள்ள பைத்தியம் போற்றுதற்குரியது. அத்தகைய பைத்தியம்தான் மனிதனுக்குப் பிடிக்க வேண்டும். உலகத்தவர்களுள் சிலர் பொருளுக்காகவும், இன்னும் சிலர் போகத்திற்காகவும், இன்னும் சிலர் புகழுக்காகவும் இவை போன்ற மற்றவைகளுக்காகவும் பித்துப்பிடித்து அலைகின்றார்கள். பொன்னாசையும், காமவெறியும் பிடித்தவர்களாக உலகமக்கள் இருக்கின்றார்கள். பணம் தேடுவதில் பைத்தியம் பிடித்து அலைகின்றார்கள். கடவுளைத் தவிர மற்ற உலகப் பொருள்களுக்குப் பித்தேறி அலையும் அவர்களுடைய அறியாமையைத்தான் என்னென்பது! தங்களைப் போன்று உலகப் பொருள்களுக்காகப் பைத்தியம் கொண்டிருப்பவர்களுடைய மன நிலைதான் அவர்களுக்கு விளங்கும். தங்களைப் போன்றே பொன்னுக்காகப் பைத்தியம் கொண்டிருப்பவனைக் குறித்து அனுதாபப்படுவார்கள். பைத்தியக்காரன் மற்றொரு பைத்தியக்காரனைச் சரி என்று கூறுவது போன்று உலகப் பித்தர்கள் உலகப்பித்தேறியவர்களையே சரிஎன்று சொல்லுவார்கள். கடவுள் பித்தேறி இருப்பவர்களின் மனநிலையை உலகத்தவர்கள் எப்படி அறிந்துகொள்வார்கள்! உன்னைப் பைத்தியக்காரன் என்று உலகத்தவர் நினைக்கலாம். உன்னிடம் ஒரு காரியமும் இல்லை என்று அவர்கள் சொல்லலாம். அவர்கள் எதையோ சொல்லட்டும். உன் பைத்தியம்தான் நல்ல பைத்தியம். யாருக்குக் கடவுள் பைத்தியம் பிடிக்கிறதோ அவர்கள் பாக்கியவான்கள். கடவுள் பைத்தியம் பிடிப்பவர்கள் அருமையிலும் அருமையாவார்கள்.'' அந்த மங்கை வருஷக் கணக்காக என் குருநாதரிடம் தங்கினர். சமயத்துறையின் பல மார்க்கங்களையும், வெவ்வேறுவித யோகசாதனமுறைகளையும் அவ்வம்மையார் என் குருநாதருக்கு உபதேசித்தார்.

இன்னும் சில நாட்களுக்குப் பின் என் குருநாதர் வாழ்ந்திருந்த தட்சிணேசுவர கோவிலுக்கு ஒரு சந்நியாசி வந்தார். அவர் கற்றறிந்தவர்; தத்துவ ஞானி; பிட்சை ஏற்று வாழ்ந்து வந்தார். அவர் ஒரு அதிசய மனிதர். அத்வைதி. இவ்வுலகைக் கற்பனை என்று ஒதுக்கித் தள்ளுபவர். அவர் வீடுகளில் தங்கமாட்டார். வெட்ட வெளியிலேயே தங்குவார். கடும் வெயிலையும், புயல் காற்றையும் பொருள் படுத்தமாட்டார். தத்துவ ஞானத்தை என் குருநாதருக்கு அவர் புகட்டினர். வெகு சீக்கிரத்தில் தம்மைவிடத் தம் சிஷ்யர் அறிவுத் திறமை வாய்ந்தவராக இருப்பதைக் கண்டார். சிஷ்யரின் அறிவுத் திறமையைக் கண்டு வியப்படைந்தார். மூன்று இரவுகளுக்கு மேல் ஒரு இடத்தில் தங்காத அவர் என் குருநாதரிடத்தில் பல மாதங்கள் தங்கியிருந்தார். என் குருநாதருக்கு அவர் சந்நியாசம் தந்த பிறகு அவ்விடத்தை விட்டுச்சென்றார்.

என் குருநாதர் தட்சிணேசுவர கோவிலில் வழிபாடு செய்து கொண்டிருந்தபோது அக் கோவிலில் இருந்தவர்கள் என் குருநாதரை மூளை கலங்கியவர் என்று எண்ணினர்கள். அவருடைய உறவினர்கள் அவரைச் சொந்த ஊருக்கு அழைத்துச் சென்று அவருக்கு ஒரு சிறு பெண்ணை விவாகம் செய்து வைத்தார்கள். விவாகம் செய்து வைப்பதன் மூலம் அவருடைய மனம் சரியாய் விடும் என்று எண்ணினர்கள். ஆனல் விவாகம் முடிந்த பிறகு திரும்பி அவர் தட்சிணேசுவரம் வந்து பழைய படி தெய்வ வழிபாட்டில் பித்துப் பிடித்தவர் ஆகிவிட்டார். எங்கள் நாட்டில் பால்ய விவாகத்திற்கு இடமுண்டு. சிறுவர்களாகவும், சிறுமிகளாகவும் இருக்கும் பொழுதே பெற்றோர்கள் அவர்களுக்கு மணம் முடித்து வைத்துவிடுவார்கள். இதில் சிறுவர்களுக்குச் சுதந்திரம் இல்லை. இத்தகைய திருமணம் ஒப்பந்த அளவில்தான் இருக்கும். மணம் முடிந்த பிறகும் மணமக்கள் பெற்றோர்களுடனேயே வாழ்ந்து வருவார்கள். பெண்ணுக்கு விவாகத்திற்குரிய வயது வந்த பிறகு உண்மையான விவாகம் நடக்கும். அப்பொழுதுதான் மணமகன் மணமகளின் வீட்டுக்குச் சென்று மனைவியைத் தன் வீட்டிற்கு அழைத்து வருவது வழக்கம். ஆனல் என் குருநாதர் தமக்கு மனைவி இருப்

பதை அடியோடு மறந்து விட்டார். நெடுந் தூரத்திற்கு அப்பால் உள்ள கிராமத்தில் வசித்து வந்த அவருடைய இளம் மனையாள் தம் கணவர் கடவுள் வழிபாட்டில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார் என்பதையும், அவரை மக்கள் பைத்தியக்காரர் என்று அழைக்கிறார்கள் என்பதையும் கேள்விப்பட்டார். உண்மையைத் தாமே நேரில் சென்று அறிய வேண்டுமென்று தீர்மானித்தார். எனவே அவர் தம் கிராமத்தை விட்டுப் புறப்பட்டுத் தம் கணவனார் இருக்கும் இடத்திற்கு நடந்தே சென்றார். மனைவி தம் முன் வந்து நிற்பதைக் கண்டதும் அவர் தம்முடன் வாழ்வதற்கு உரிமை உண்டு என்பதை ஏற்றுக்கொண்டு உடன் வாழ்வதற்கு அனுமதி கொடுத்தார். ஆனால் இந்தியாவில் துறவு வாழ்க்கையை மேற்கொள்ளுபவர்கள் ஆணாக இருப்பினும், பெண்ணாக இருப்பினும் உலகக் கடமையிலிருந்து விடுபட்டவர்கள் ஆகி விடுவார்கள். ஆனால் என்னுடைய குருநாதரோ தம் மனைவியின் கால்களில் வீழ்ந்து வணங்கிப் பகர்ந்ததாவது: "என்னைப் பொறுத்தவரையிலும் பராசக்தி ஒவ்வொரு பெண்ணினிடத்திலும் வாழ்வதை நான் காண்கிறேன். ஒவ்வொரு பெண்ணும் பராசக்தி வடிவமாக எனக்குத் தோன்றுகிறார்கள். உன்னிடத்திலும் பராசக்தியைத்தான் நான் காண்கின்றேன். ஆனால் நான் உன்னை மணந்துள்ளேன். உலக நிலைக்கு நீ என்னை இழுக்க விரும்பினால் நான் உன் விருப்பத்தை நிறைவேற்றக் கடமைப்பட்டுள்ளேன்." அந்தப் பெண்மணியோ தாய்மையே வடிவெடுத்த புனிதவதியாக இருந்தார். தம் கணவனாருடைய நோக்கத்தை அறிந்து அவருடைய கருத்துக்கு முற்றிலும் இசைவதற்குச் சம்மதித்தார். கணவனை உலக வாழ்வுக்கு இழுத்துக் கொண்டு வருவதற்குத் தாம் விரும்பவில்லை என்றும், அவருடன் இருந்து அவருக்குப் பணிவிடை செய்து அவர் பெற்றிருந்த ஞானத்தை அடைவதற்குத் தாம் விரும்புவதாகவும் கூறினர். என்னுடைய குருநாதரின் முக்கிய சிஷ்யையாக அவர் ஆனர். குருநாதரை அவர் தெய்வமாக மதித்தார். மனைவியின்மூலம் வரக்கூடிய தடையும் என் குருநாதருக்கு அகன்றது. அவர் தாம் விரும்பிய வாழ்க்கையை வாழ்வதற்குச் சுதந்திரம் பெற்றார்.

இரண்டாவதாக, பல்வேறு மதங்களின் உண்மைகளை அறியவேண்டுமென்ற ஆவல் என் குருநாதரைப் பற்றிக்கொண்டது. பிற மதங்கள் எத்தகையன என்பதை அறிந்து கொள்வதற்கு அம்மதங்களுக்குரிய ஆச்சாரியர்களைத் தேடமுற்பட்டார். வெறும் நூலறிவு படைத்தவர்களை மட்டும் ஆச்சாரியர்கள் என்று இந்தியாவில் சொல்லுவதில்லை. உண்மையை நேருக்குநேர் தரிசிப்பவர்களைத் தான் ஆச்சாரியர்கள் என்று இந்தியாவில் சொல்லுவார்கள். முகமதிய மதத்தைப்பற்றித் தெரிந்து கொள்வதற்கு முகம்மதிய பக்கிரி ஒருவரிடம் சென்று அவரோடு வாழ்ந்து வந்தார். அவர் போதித்த சாதனைகளை என் குருநாதர் பயின்று வந்தார். அச்சாதனைகளில் சிரத்தையோடு ஈடுபட்டபொழுது அவைகள் என் குருநாதரை அவர் முன்பே அடைந்திருந்த லட்சியத்திற்கு எடுத்துச் செல்வதைக் கண்டார். இயேசுநாதர் போதித்த கிறிஸ்துவ மதத்தையும் முறையாகப் பயின்று அதுவும் ஒரே லட்சியத்திற்கு எடுத்துச் செல்வதைக் கண்டார். மற்ற மதப்பிரிவுகளின் மார்க்கங்களையும் தம் முழுமனதுடன் பயின்றார். அவைகளும் ஒரே லட்சியத்தின்கண் அவரை எடுத்துச் செல்வதைக் கண்டார். ஒவ்வொரு மதத்தையும் அனுஷ்டித்துப் பார்த்து, எல்லா மதங்களும் உண்மையானவையே என்பதைக் கண்டார். மதங்களுக்கிடையில் வழிமுறைகளும், சொற்களும்தாம் மாறுபட்டிருக்கின்றன என்பதையும் கண்டார். எல்லா மதங்களும் ஒரே லட்சியத்தைக் கொண்டிருக்கின்றன. ஆனால் மதப்பிரிவினர்கள் தங்கள் சுயநலத்துக்காக சண்டை போட்டுக் கொள்கிறார்கள். உண்மையை அறிய வேண்டும் என்ற ஆவல் அவர்களுக்கில்லை. பேருக்காகச் சண்டை போட்டுக் கொள்கிறார்கள். இரண்டு மதங்களைச் சார்ந்தவர்கள் ஒரே உண்மையைப் போதிக்கிறார்கள் என்றாலும், "அவர் சொல்லுவது உண்மையன்று. ஏனெனில், அவர் எங்கள் மதத்தைச் சார்ந்தவர் அல்லர். ஆகையால் அவர் சொல்வதற்குச் செவி சாய்க்காதீர்கள்" என்று ஒரு மதத்தினர் மற்றொரு மதத்தினரைப்பற்றிப் பகர்கிறார்கள்.

(தொடரும்)

# ஜீவபோதமும் பரபோதமும்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1972ஆம் ஆண்டு திருவேடகம் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[263 ஆம் பக்கத் தொடர்ச்சி]

வாழ்க்கையில் துயரம் வருகின்றபொழுது, ''எனக்கு ஏன் இந்தத் துயரம் வந்தது?'' என்று கேட்பவன் பண்படாதவன் ஆகின்றான். தன்னைப் பண்படுத்துவதற்காக வாழ்வில் துயரம் வருகிறது என்று அறிபவன் பண்பாடு அடைகின்றான். துன்பத்தின் மூலம் திருத்தி அமைக்கப்படுகிறான் என்பதை அறிபவன் துன்பம் வருவது இறைவன் திருவுளம் என்று கருதுகிறான். துன்பத்தின் மூலம் மனம் பண்பட்டுத் தெளிவடைகிறது. இன்ப துன்பங்களை நமக்கு நாமே கற்பனை செய்துகொண்டு அவைகளுக்கு நாம் ஆளாகி இருக்கிறோமே தவிர உண்மையில் அவைகளோடு நாம் சம்பந்தப்பட்டவர்களல்லர் என்பது மனம் தெளிவடைகிறபொழுது நமக்கு நன்கு விளங்குகின்றது. இறைவன் திருவருள் கொஞ்சகாலம் நம்மை மயக்கத்தில் வைக்கிறது. மயங்கியநிலையில் இன்ப துன்பங்களுக்கு ஆளாகின்றோம். அவற்றின்மூலம் பக்குவப்படுகின்றோம். இறைவன் அருளால் மயக்கம் நீங்கித் தெளிவடைகின்றோம். இதுதான் உண்மை. இவ்வுண்மையை அறிகிறபொழுது நம்முடைய கர்த்ருத்துவம் நீங்கி துன்பம் துடைக்கப்படுவதாகிறது.

அமெரிக்கப் பிரயாணத்திற்குப் பிறகு சென்னை வந்த சுவாமி விவேகானந்தர் சென்னையில் சொற்பொழிவு நிகழ்த்தினார். அவருடைய கடைசிநாள் சொற்பொழிவின் முடிவில் ''உலகத்தில் துன்பங்கள் இருப்பதற்குக் காரணம் என்ன?'' என்னும் கேள்வி கேட்கப்பட்டது. ''அறியாமை, அறியாமை, அறியாமை'' என்று அக்கேள்விக்கு விடைகூறினார். உண்மையை உள்ளபடி அறிகின்றபொழுது துன்பத்துக்கு இடமில்லை. அப்பர் சுவாமிகளை நெருக்கடியான சூழ்நிலையில் வைத்து ''பெரும் துன்பத்திற்கு ஆளாகப்போகிறீர்கள் என்று சொன்னார்கள்.'' அதற்கு அவர் ''இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை'' என்று கூறினார். அவர் அடைந்திருந்த பெருநிலையிலிருந்து சிறிதும் வழுவாதவராக இருந்தார். துன்பத்துக்கு ஏதுவான நிகழ்ச்சி அவரை வந்தடைந்தபொழுது ஈசனுடைய திருவிளையாடல் என்று ஈசன் மீது அந்தப் பாரத்தைப் போட்டுவிட்டுத் துயரப்படாதவராக இருந்தார். எவன் ஒருவன் நிகழ்கின்ற நிகழ்ச்சிக்குத் தன்னைக் கர்த்தாவாக வைத்துக்கொள்கிறானோ அவன் துன்பத்துக்கு ஆளாகிறான்.

ஜீவன் என்கின்ற நிலையில் தனி வியக்தி எதுவும் இல்லை. ஈசனுடைய அறிவுக்குப் புறம்பாக நம்முடைய அறிவு என்று சொல்வதற்கு ஒன்றும் இல்லை. ஒலி பெருக்கி தன் வேலையைச் செய்கிறது. அது மின்சக்தியின் செயலே அன்றி ஒலிபெருக்கியின்செயல் அன்று. மின்சார பல்பு வெளிச்சத்தைத் தருகிறது. அவ்வெளிச்சம் மின்சக்தியினுடையதே அன்றி பல்பினுடையது அன்று. இங்ஙனம் எந்தெந்தக் கருவியின் மூலம் என்னென்ன அதிசயங்கள் நடந்தாலும் அது மின்சக்தியினுடைய செயலே அன்றி கருவியின் செயல் அன்று. அதுபோன்று இறைவனிடம் கருவியாக இருப்பதோடு நம் செயல் முடிந்துவிடுகிறது. நம்மை இறைவனிடம் கருவியாக ஒப்படைத்து அகங்காரமற்று இருப்போமானால் துன்பங்கள் நம்மைவிட்டுப் போய்விடுகின்றன. நாம் பெற்ற அறிவெல்லாம் கடவுளிடம் இருந்து வந்தன என்பதை அறிந்துகொள்ளவேண்டும். வாழ்க்கையில் அறிவை எப்படிக் கையாளவேண்டும் என்பதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய வாழ்க்கையில் நிகழ்ச்சி ஒன்றை எடுத்துக்கொள்ளலாம். அவர் காலத்தில் கல்வியிலே கரைகண்டிருந்த ஈசுவர சந்திர வித்யாசாகரை ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒரு தடவை பார்க்கச் சென்றார். ஈசுவர சந்திரவித்யாசாகரைப் பார்க்கச் செல்வதற்கு முன்பு ஸ்ரீ ராமகிருஷ்ணர் அம்பிகையிடம் பிரார்த்தித்துக் கொண்டதாவது: ''தாயே, நான் கல்லாத மடையன். கல்வியில் முதிர்ந்துள்ள வித்யாசாகரைப் பார்க்கப் போகின்

றேன். அவரிடம் என்ன பேசுவதென்று எனக்குத் தெரியவில்லை. நீ என்னை எப்படிப் பேசவைக்கின்ருயோ அப்படி நான் பேசுவேன்.'' இங்ஙனம் பிரார்த்தனை செய்துகொண்டு ஸ்ரீ ராமகிருஷ்ணர் வித்யாசாகரிடம் சென்ருர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் பேசினதைக் கேட்டு வித்யாசாகர் பகர்ந்ததாவது: "உங்களுடைய பேச்சின் கருத்துத்தான் என்னே! உபநிஷதங்களில் இல்லாத பெரியபெரியதத்துவங்கள் உங்கள் வாயிலிருந்து வெளிவருகின்றன. என்னே உங்களுடைய அறிவு!'' அம்பிகையினிடத்தில் அவர் தம்மைமுழுவதும் ஒப்படைத்து அம்பிகையின் கையில் கருவியாக இருந்ததன் விளைவாக அவர் மூலம் அத்தகைய அறிவு வெளியாகியது. ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனைக் கருவியாக மட்டும் இருக்கச் சொன்ஞர். அர்ஜுனன் பண்பட்ட கருவியாகக் கிருஷ்ணன் கையில் அமைந்தான். அர்ஜுனனைக் கருவியாகக்கொண்டு கிருஷ்ணன் பெரிய காரியத்தைச் சாதித்தார். ஜீவர்களாகிய நாம் நம்மைப் பண்படுத்தி நம்மை இறைவனிடம் ஒப்படைக்கவேண்டும். அப்பொழுது இறைவன் நம் மூலம் அரிய பெரிய காரியங்களை முடித்துக்கொள்கிருர். நம்மை முற்றிலும் இறைவனிடம் ஒப்படைத்துவிடுதல் சரணுகதி எனப்படுகிறது. நமசுகென்ற அறிவு இல்லை. இறைவனுடைய அறிவுதான் நம்மூலம் பிரதிபலிக்கிறது. "எளியனேர்க்கு அறிவாவது ஏது'' என்று தாயுமானவர் பகர்கின்ருர்.

நம்மிடத்திலுள்ள அக்ஞானத்தின் விளைவாக நம்மூலம் நடைபெறுகின்ற ஒவ்வொரு செயலுக்கும் நம்மைக் கர்த்தாவாக எண்ணிக்கொள்கின்ேரும். அதன் விளைவாக நாம் துயரத்துக்கு ஆளாகின்ேரும். நம்முடைய அறியாமைதான் நாம் படும் துன்பத்திற்குக் காரணம் என்பதைத் துயரப் படும்பொழுதெல்லாம் நாம் ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும். "இறைவா, நான் அறியாமையினல் துயரத்துக்கு ஆளாகின்றேன். எனக்கு நல்லறிவைக் கொடு'' என்று பிரார்த்தனை பண்ணிக்கொண்டால் தெளிவு உண்டாகிறது. ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குச் சந்தேகம் ஏற்பட்டபொழுதெல்லாம் அம்பிகையினிடத்து ஓடுவார். "தாயே, நான் இந்தச் சந்தர்ப்பத்தில் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதை நீயே எனக்குப் புகட்டிஅருள்வாயாக'' என்று பிரார்த்தித்துக் கொள்வார். அம்பிகையினிடமிருந்து அதற்குரிய பதில்வரும். அம்பிகை காட்டித் தந்தபடி அவர் நடந்துகொள்வார். அது சரியாக இருக்கும். நமக்கு ஏற்படுகிற கஷ்டத்தைஆராய்ந்து பார்த்தால்நமக்கே உண்மை விளங்கும். நம்முடைய கற்பனையின் மூலமாக நமக்கே நாம் கஷ்டத்தை உண்டுபண்ணிக்கொள்கிறேம். நாம் கஷ்டப்படாத நிலையில் இருக்கமுடியும் என்பது நமக்கே விளங்கும். முடிசூட இருந்த ராமன் வனவாசம் போகும்படி தந்தையாரிடமிருந்து ஆக்ஞை பிறந்தது. "என் தாய் தந்தையர் எனக்கு இத்தகைய துன்பத்தைத் தரலாமா?'' என்று ராமன் புலம்பியிருக்கலாம். அப்படி அவன் புலம்பி இருந்தால் அந்தத் துக்கத்துக்கு ராமன் தான் பொறுப்பாளி ஆவான்; மற்றவர்கள் பொறுப்பாளி ஆகமாட்டார்கள். சிலர் "கடவுள் ஏன் இப்படிப் படைத்தார்?'' என்று குறைகூறுவார்கள். உண்மையில் கடவுள் அவர்களை அப்படிப் படைக்கவில்லை. அவர்கள் தாம் தங்களை அப்படிப் படைத்துக்கொண்டார்கள். இவ்வுண்மையை அறிகின்றபொழுது துயரத்தைச் சுலபத்தில் துடைத்துவிடலாம். "அறிவிலா ஏதம் வரும் வகை ஏது?'' என்கிருர் தாயுமானவர்.

நாம் விதியை நொந்துகொள்கிறேம். பூர்வ ஜன்ம வினையின்பயனுக இத்தகைய கஷ்டம் வந்திருக்கிறதென்று பகர்வோம். இதைச் சிறிது ஆராய்வோம். மனிதன் ஒருவன் வனந்தரத்தில் நடந்துசெல்வதாகக் கனவுகண்டான். அப்பொழுது புலி ஒன்று அவனைத் துரத்திக்கொண்டுவந்தது. புலியினிடமிருந்து தப்புவதற்குப் படாத பாடுபட்டு ஓடினன். கால்தவறிக் கீழே விழுந்தான். புலி அவன் மீது பாயத் தொடங்கியது. இப்படி ஒருவன் கனவு கண்டான். இந்தக் கஷ்டத்தை உண்டுபண்ணிக்கொண்டது யார்? அவனுடைய அந்தக்கரண விருத்திதான் அந்தக் கஷ்டத்தை உண்டு பண்ணியது. கனவைப்பற்றிய அதே உண்மைதான் நனவுக்கும் பொருந்தும். ராமன் காட்டுக்குச் சென்ருன். தசரதன் அவன் பிரிவால் மரணம் அடைந்தான். தசரதன் முன்பொரு

தடவை ரிஷிபுத்திரன் ஒருவனைத் தவறுதலாக யானை என்று எண்ணி அம்பெய்திக் கொன்று விட்டான். ரிஷி தன் மகனை இழந்து தவிக்கும்படி செய்த வினையின் விளைவை ராமனை இழந்து தசரதன் அனுபவித்தான்என்று தசரதனுக்கு நேர்ந்த துன்பத்திற்கு வியாக்யானம் செய்வார்கள். ஆனால் ராமனுக்கு என்ன வினையின் விளைவாகத் துன்பம் வந்தது ? ராமனுக்கு வீட்டில் இருப்பதும், காட்டில் இருப்பதும் ஒன்று. நாட்டில் உலகத்தவர்களுக்கு மத்தியில் இருப்பதை விடக் காட்டில் ரிஷிகளுக்கு மத்தியில் இருப்பதற்கு ராமன் ஆனந்தம் அடைந்தான். ராமனுக்கு வினை ஏதும் இல்லை. மனதில் ஒன்றை வாங்கிக்கொண்டால்தான் அது வினையாக வருகிறது. எல்லாம் ஈசன் திருவருள் என்று மனதில் எதையும் வாங்கிக்கொள்ளாதவர்களுக்கு வினை ஏதும் இல்லை. விவேகம் படைத்த சாதகர்களாக இருப்போமேயானால் வினையை எளிதில் ஒதுக்கிவிடலாம். "வினை ஏது ?" என்று தாயுமானவர் பகர்கின்றார்.

வினைக்கேற்ற சரீரம் என்று பகர்கிறோம். வினையின் விளைவாக நமக்குச் சரீரம் வந்தமைகின்றது. வினையில்லாவிட்டால் சரீரமும் இல்லை. இதற்குச் சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். சுமார் எழுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு சென்னைக்கருகிலுள்ள பெரம்பூரில் சித்தபுருஷர் ஒருவர் இருந்தார். பலபேர் அவரைப் பைத்தியம் என்று எண்ணி வந்தார்கள். யாரோ சிலர்தாம் அவர் பெருநிலையில் இருக்கிறார் என்பதை அறிந்திருந்தார்கள். அவருடைய கெண்டைக் காலில் புண் ஏற்பட்டுப் புரையோடி இருந்தது. புண்ணில் புழுக்களும் இருந்தன. அவர் ஒருநாள் மரத்தடியில் அமர்ந்திருந்தபொழுது அவர் கெண்டைக்கால் புண்ணிலிருந்து வெளி வந்த புழு ஒன்று தரையில் விழுந்து திண்டாடிக்கொண்டு இருந்தது. அப்புழுவைப் பார்த்த அவர் இரக்கப்பட்டு "இருக்க வேண்டிய இடத்தில் சுகமாய் இருப்பதை விட்டு ஏன் நீ இங்கு திண்டாடுகிறாய் ?" என்று கூறி சருகினால் அப்புழுவை எடுத்துத் தம் கெண்டைக்கால் புண்ணில் வைத்தார். சரீரத்துக்குப் புண் வந்ததைக் குறித்து அவர் கருத்தில் வாங்கவில்லை. தம் காயத்தைத் தமக்குரியதாகக் கருதாது புழுவுக்குரியதாகக் கருதினார். சரீரத்தை நம்முடையது என்று கருதுவது அக்ஞானம். "பருத்த உடல் தம்மது என்று தாமிருக்க நாய், நரி, பேய்கள் தம்மது என்றுதாமிருக்கின்றன" என்றுபெரியார் ஒருவர் கூறுகின்றார். நமக்குச் சொந்தமில்லாத சரீரத்தை நம்முடையது என்று கருதி நாம் படாதபாடுபடுகிறோம். சரீரத்தை நம்முடையது என்று கருதுவது நம்முடைய கற்பனை. பரிபூரண நிலை நம்முடைய சொந்தநிலை. பரிபூரண நிலையில் நம்மை ஒன்றுபடுத்தும்போது சரீரத்துக்குச் சாட்சியாக இருக்கிறோம். சரீரத்துக்கு வரும் நலம் கேடுகளைச் சாட்சியாக இருந்து அனுபவிக்கலாம். சரீரத்தை நம்முடையது என்று கருதி வருந்துவது அறியாமை. அவ்வறியாமைக்குப் பொறுப்பாளி நாமே ஆவோம்.

கௌரவர்கள் பாண்டவர்களை எதிர்த்தார்கள். பாண்டவர்கள் அறநெறிக்கு உட்பட்டவர்களாக விமோசனம் தேடினார்கள். அவ்விரு கூட்டத்தினரும் தங்கள் செயல்கள் இச்சா சுதந்திரம் உடையவைகள் என எண்ணியிருந்தார்கள். கிருஷ்ணபரமாத்மா விசுவரூபதரிசனம் காட்டியபின் அவ்விருவருடைய செயல்களும் அவருடைய திருவிளையாடல்கள் என அவர்களுக்கு விளங்கின. தெய்வத்தைச் சார்ந்திருப்பவர்களுக்கு விரைவில் விமோசனம் கிடைக்கிறது. தெய்வத்தைச் சாராது அகங்காரம் கொண்டிருப்பவர்களுக்குத் துன்பம் உண்டாகிறது. அகங்காரம் உள்ளளவும் நமக்குத் தனி வியக்தி இருப்பதாக எண்ணிக் கொண்டிருக்கிறோம். அப்பொழுது இச்சா சுதந்திரம் நமக்கு இருப்பதாக எண்ணுகின்றோம். அகங்காரம் போய்விட்டால் இச்சா சுதந்திரம் போய்விடுகிறது. யாவும் இறைவனுடைய திருவிளையாடல் என்பது அப்பொழுது விளங்குகிறது. பரவஸ்து ராமனாகவும் ராவணனாகவும் வந்தது. பரவஸ்து கேட்டை ஒழித்து நலத்தை நிலைநாட்டிற்று. கிருஷ்ண பரமாத்மாவிடமிருந்துதான் கௌரவர்களும் பாண்டவர்களும் வந்தார்கள். எல்லாவற்றையும் துடைத்துத் தள்ளுதல் என்பதும் கிருஷ்ணனுடைய சங்கல்பம். அர்ஜுனன் இல்லாவிட்டாலும் அக்காரியம் நிகழ்ந்திருக்

ளும். அர்ஜுனன் கிருஷ்ணன் கையில் வெறும் கருவியாகமட்டும் இருந்தான். கிருஷ்ண னுடைய சங்கல்பமே நிறைவேறியது. இறைவ னுடைய பெரிய திட்டம் எக்காரணத்தை முன் விட்டும் தடைபடுவது இல்லை. யாரோ ஒருவரைக் கருவியாகக்கொண்டு அவர்தம் காரியத்தை முடித்துக்கொள்கிறார். நம்மை அவருடைய கருவியாக ஒப்படைக்கும்பொழுது இன்பதுன்பங்கள் நம்மைச் சார்வதில்லை. அகங்காரத்தின் விளைவாக நாம் இன்பதுன்பங் களுக்கு ஆளாகின்றோம். ஸ்ரீ ராமகிருஷ்ணர் இதை ஓர் உவமானத்தின் மூலம் விளக்கு கின்றார். கன்றுக்குட்டி துள்ளிக்குதித்து விளை யாடுகின்றது. அது பெரிதானவுடன் அதன் கழுத்தில் நுகத்தடியை வைக்கின்றார்கள். அப்பொழுது அதற்குத் துன்பம் ஆரம்பிக் கிறது. அது உயிருடன் இருக்கும்பரியந்தம் அதனிடமிருந்து நன்கு வேலை வாங்குகின்றார் கள். அது செத்துப்போன பிறகு அதன் தோலை உரித்து மத்தளம், பறை செய்கிறார்கள். அவற்றை அடிக்கும்பொழுது 'ஹம் ஹம்' என அவை ஓசையைக் கிளப்புகின்றன. அப் பொழுது அதன் தோலுக்கு அடிவிழுகிறது. அதன் நரம்பைக்கொண்டு வில் செய்து பஞ்சு உடைக்கிறார்கள். அப்பொழுது அதனிட மிருந்து 'துஹி, துஹி' என ஓசையுண்டா கிறது. அதற்கு 'நீ, நீ' என்பது பொருளாகும். அப்பொழுதுதான் அதற்குத் துயரம்போகிறது. நான் என்கின்ற அகங்காரம் இருக்கும்வரை யில் துன்பப்பட்டாகவேண்டும். "இறைவா, எல்லாம்நீ" என்கின்றபொழுது துன்பம் நீங்கு கிறது. அகங்காரம்கொண்டிருந்த துரியோ தனன் கிருஷ்ணனிடம் யுத்த தளவாடங்கள், சேனைகள் எல்லாம் வேண்டும் என்று கேட் டான். தங்களைக் கிருஷ்ணனிடம் ஒப்படைத் திருந்த பாண்டவர்களின் பிரதிநிதியாக இருந்த அர்ஜுனன் "கிருஷ்ணா, நீ இருந்தால் போதும்"; என்று கிருஷ்ணனைமட்டும் கேட் டான். பாண்டவர்கள் தங்களைக் கிருஷ்ணனிடம் ஒப்படைத்திருந்தமையால் கவலையற்றிருந்தார் கள். யுத்தம் முடிந்தான பிறகு ஸ்ரீ கிருஷ் ணன் பாண்டவர்களனைவரையும் காந்தாரியிடம் அழைத்துப்போனார். அப்பொழுது காந்தாரி அழுதுபுலம்பியவளாக "கிருஷ்ணா எல்லாரும் அழிந்ததற்கு நீ தான் காரணம்" என்றாள். கிருஷ்ணன் அதற்குப் புன்சிரிப்பு சிரித்தார். ஏனெனில் எல்லாம் அவர் செயல் என்று காந்தாரி சொன்னது முற்றிலும் உண்மை. பக்தன் ஒருவன் தன் செயல்களையெல்லாம் இறைவனிடம் ஒப்புவித்துவிட்டுத் தனக்கு நலம் கேடு எது வந்தாலும் "நன்றே செய்வாய் பிழை செய்வாய், நானோ இதற்கு நாயகமே!" என்று பகர்கின்றான். இறைவனுடைய திரு வுளப்படி எது வேண்டுமென்றாலும் நிகழட்டும் என மனவுறுதி பூண்டவனாக இருக்கின்றான். பக்தனாகிய பிரஹ்லாதனுக்குத் தம் காட்சி யைக்கொடுத்த திருமால் "உனக்கு என்ன வரம்வேண்டும்?" என்று கேட்டார். "இறைவா, உன் காட்சியே போதுமானது. அதற்குமேல் எனக்கு வேறு என்ன தேவையிருக்கிறது?" என்றான் பிரஹ்லாதன். "என் காட்சி கிடைத் தவர்களுக்கு நான் ஏதாவது வரம் தந்தாக வேண்டும். ஆகவே ஏதாவது வரம் கேட்டுப் பெற்றுக்கொள்" என்றார் திருமால். "பிரபு! அப்படியானால் எனக்குக் கேடு செய்தவர் களுக்கும் நீ நலமே செய்யவேண்டும்" என் றான் பிரஹ்லாதன். பிரஹ்லாதன் கேட்டைத் தன் உள்ளத்தில் வாங்கிக்கொள்ளவில்லை என்பதை அவன் கேட்டவரம் விளக்குகிறது. அஹங்காரம் அற்றிருந்ததால் கேட்டை வாங் கிக்கொள்ளாத நிலை அவனுக்கு ஏற்பட்டிருந் தது. "என் இச்சா சுதந்திரம் சிறிதுமில்லை" என்கிறார் தாயுமானவர்.

மயக்கத்தால் செயல்களுக்கு நம்மைக் கர்த் தாவாக உணருவதால் துன்பங்கள் நம்மை வந்து தாக்குகின்றன. நம்மைக் கர்த்தாவாக எண்ணாது செயல்களுக்கு எல்லாம் இறை வனைக் கர்த்தாவாகவும், நம்மை அவருடைய கையிலுள்ள கருவியாகவும் எண்ணுகின்ற பொழுது பிரபஞ்சத்திலிருந்து கேடு எதுவும் வருவதில்லை. குழந்தைகளின் முன்னிலையில் கொலை நிகழ்ந்தாலும் அதைப் பார்த்துக் குழந்தைகள் சிரித்துக்கொண்டிருக்கும். கொலை கொடியது என்பது அவைகளுடைய கருத்தில் இல்லை. ஆகையால் கொலை நிகழ்வதற்கிடை யில் அதைப் பார்ப்பதில் அவைகள் சந்தோஷ மாக இருக்கின்றன. முற்றிலும் இறைவனைச் சார்ந்திருப்பவனுடைய செயல் அத்தகையது.

கர்த்ருவத்தைத் தியாகம் செய்தவனுக்கு உலகில்நிகழும்செயல்களெல்லாம் இறைவனுடைய திருவிளையாடல்களாகத் தென்படுகின்றன.

எண்ணங்களைத் தோற்றுவித்துத் துன்பத்தை உண்டுபண்ணுவது சித்தமாகிறது. மனதைத் துடைத்துத் தள்ளிவிட்டால் அதற்கு அப்பாலுள்ள பேரானந்த சொருபமாகத் திகழ்கின்றோம். மனதையும் கடந்து பூரணத்தில் நிலைநின்று சதா ஆனந்தமாக இருப்பதற்குப் பதிலாக இந்த உலகத்தைக் கற்பனை செய்து துன்பத்துக்கு ஆளாகி இருக்கின்றோம். மனதுக்கு அடிமையானதன் விளைவாகத் துன்பத்தை அனுபவிக்கின்றோம். மனதை அழித்துத்தள்ளி விட்டுப் பரத்தில் ஒன்றுபடுவது நம்முடைய குறிக்கோளாகும். "சித்தாந்த முத்தி முதலே" என்கிறார் தாயுமானவர்.

மானுடப் பிறப்புக்கு முன்பு பல பிறப்புக்கள் எடுத்திருக்கின்றோம். அப்படி எடுத்த பிறப்புக்கள் கணக்கற்றவை. அப்பிறப்புக்களிலெல்லாம் நம்மைப் படிப்படியாகப் பக்குவப்படுத்திக்கொண்டே வந்து மானுட ஜன்மம் எடுத்திருக்கின்றோம். மானுட ஜன்மத்துக்கு வந்தானபிறகு தர்மம் எது, அதர்மம் எது என்பதைப்பற்றி ஆராய்கிறோம். இறைவனுடைய திருவருளைப் பெறுவதற்கு மனிதன் முயல்கின்றான். கீழ்நிலையிலுள்ள மனிதன் கர்மத்துக்குத் தன்னைக் கர்த்தாவாக எண்ணிக்கொண்டு துன்பப்படுகின்றான். கர்த்ருவத்தைத் திருத்தியமைப்பதற்கு மானுடப் பிறப்பு அமைந்திருக்கிறது. எல்லாம் ஈசன் செயல் என்பதை உணர்ந்து தன்னுடைய ஜீவவியக்தியை ஈசனிடம் ஒப்படைப்பது பிரபத்தி அல்லது சரணாகதி அல்லது அடைக்கலம் என்று பெயர் பெறுகிறது. அவ்வுண்மையை உணர்ந்து அவ்வுண்மையை அடைதற்கு நம்மைப் பக்குவப்படுத்துவது ஆத்மசாதனமாகிறது. தன்னை அடியோடு இறைவனிடம் ஒப்படைத்துவிட்டால் உலக வாழ்வே விளையாட்டாகத் தோன்றும். அப்பொழுது உலக வாழ்க்கையை நாம் நன்கு ரசிக்கலாம். பிருந்தாவனத்தில் கண்ணன் லீலைசெய்ததாக நாம் படிக்கின்றோம். அஹங்காரத்தைத் துடைத்துவிட்டு குழந்தை நிலையில் மனதை வைத்துக் கொள்கிறவர்களுக்கு இன்றைக்கும் கண்ணனுடைய லீலை விளங்கும். அவனுடைய லீலையில் நாமும் கலந்துகொள்ள முடியும். வீரனொருவன் வாழ்வு என்னும் போராட்டத்தை நன்கு ரசிக்கின்ற பாங்கில் நிகழ்த்துகின்றான். வீரனொருவனே போர்க்களத்தில் கண்ணன் உபதேசித்த கீதையை ஆராய்ச்சி செய்ய முடியும். அவனுக்குத்தான் கீதை புகட்டும் தத்துவம் உள்ளபடி விளங்கும். நமக்கு இச்சா சுதந்திரம் இல்லை. நம்மைப் பண்படுத்தி இறைவனிடம் நம்மை ஒப்படைத்து அவனுடைய விளையாட்டில் நாம் பங்குகொள்ள வேண்டும். ஜீவபோதத்தை ஒழித்துப் பரபோதத்தை வளர்ப்பவர்களுக்கே வாழ்க்கைத் தத்துவம் சரியாக விளங்குகிறது. அவர்களே வாழ்க்கைத் தத்துவத்தை அறிந்து வாழ்க்கையை நடாத்துபவர்களாகிறார்கள்.

மானுட ஜன்மம் எடுக்கும் வரையில் ஜீவபோதத்தை வளர்த்து வந்தோம். ஜீவபோதம் வளரும் அளவு அகங்காரம் தடிக்கிறது. உடலைத் தான் என்று கருதுவது தடித்த அகங்காரம் ஆகும். ஜீவபோதம் கரைந்து பரபோதம் மேலிடுகிற பொழுது அகங்காரம் கனிந்த அகங்காரம் அல்லது பழுத்த அகங்காரமாக மாறுகிறது. கனிந்த அகங்காரம் யாருக்கும் கெடுதல் செய்வதில்லை. யாவர்க்கும் நலம் செய்விப்பதே கனிந்த அகங்காரத்தின் விளைவாகும். தடித்த அகங்காரம் அகங்காரமுடையவனுக்கும், மற்றவர்களுக்கும் கேட்டையே உண்டுபண்ணுகிறது. மனிதன் தன்னிடத்திலுள்ள கேட்டைப் போக்கி நலத்தை வளர்க்கும் பொழுதுதான் ஜீவபோதம் பரபோதமாக மாறுகிறது. "நன்றுடையான் தீயதிலான்" என்பது இறைவனுக்கு விளக்கம். முற்றிலும் நலம் ஓங்கப்பட்டவர்களாக நாம் மாறி அமைந்தால் தெய்வத்தன்மை உடையவர்களாகின்றோம். பரபோதமும் தெய்வத்தன்மையும் ஒன்று. மனிதன் இயல்பிலேயே நல்லவன். சூழ்நிலையின் காரணமாகவும் இந்திரிய சுகத்தில் நாட்டம் கொண்டிருப்பதின் காரணமாகவும் அவன் தன்னைக் கேடுடையவனாகச்செய்து கொள்கிறான். பரநாட்டம் உடையவன் ஆகும் பொழுது இந்திரிய சுகத்தை வெல்லுகின்றான். ஜீவபோதத்தை அழித்துப் பரபோதத்தைப் பெறுவது மனிதனது குறிக்கோள். (முற்றும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-108

646. सत्यानन्दस्वरूपिणी ஸத்யானந்த ஸ்வரூபிணீ— சத்திய சொருபமாகவும், ஆனந்த சொருபமாகவும் இருப்பவள் என்பது இதன் பொருள்.

ஒருகாலத்தில் இருந்து மற்றொரு காலத்தில் இல்லாது போவது எதுவோ அது சத்தியமாகாது. நம்முடைய உடல் சத்தியமன்று. முன்பொருகாலத்தில் அது இல்லை. பின்பொருகாலத்தில் அது இருக்கமாட்டாது. காலத்தில் அது அடிபடுவதால் உடல் சத்தியமாகாது. ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்தில் இல்லாதுபோம் பொருள் ஒன்று சத்தியமாகாது. நம்முடைய உடல் ஓரிடத்தில் இருக்கிறது. மற்றோர் இடத்தில் அது இல்லை. ஆகையால் அது சத்தியமாகாது. ஒரு காரணத்தை முன்னிட்டு இருந்து மற்றோர் காரணத்தை முன்னிட்டு எது இல்லாது போகிறதோ அது சத்தியமாகாது. நம்முடைய உடல் பிறப்பை முன்னிட்டு இருக்கிறது. இறப்பை முன்னிட்டு இல்லாது போகிறது. அன்னை பராசக்தியோ கால, தேச, நிமித்தத்தில் கட்டுண்ணாது இருக்கிறாள். ஆதலால் அவள் சத்தியம். கால, தேச, நிமித்தம் மாயையின் கூறு. அவைகளுக்கு நிலைபேறு கிடையாது. கால, தேச, நிமித்தத்தில் அடங்கியிருப்பவைகள் அனைத்துக்கும் நிலைபேறு இல்லை. அன்னை பராசக்தியோ கால அதீதமாய் எங்கும் வியாபகமாய் கர்மாதீதமாய் இருப்பதால் அவள் சத்சொருபம். பின்பு அவள் ஆனந்த சொருபம் என்பதற்கு அவளே சான்றாகிறாள். பிரபஞ்சாதீதத்திலுள்ள அவள் பிரபஞ்சத்திலுள்ள அனைத்துமாய் இலங்குகிறாள். பிரபஞ்சத்திலுள்ள உயிர்களனைத்தும் ஆனந்தத்தில் திளைத்திருக்கின்றன. ஏனென்றால் ஆனந்தமயீயாக இருக்கிற அன்னையிடத்திலிருந்து இந்த உயிர்கள் யாவும் உருவெடுத்து வந்திருக்கின்றன. தங்கத்திலிருந்துவந்திருக்கிற நகைகளெல்லாம் தங்கமாய் இருப்பது போன்று ஆனந்தத்தினின்று உருவெடுத்து வந்துள்ள உயிர்களனைத்தும் ஆனந்தத்தை விளக்கிக்கொண்டிருக்கின்றன. மரம், செடி, கொடிகளாக இருக்கின்ற உயிர் வகைகளை ஆராய்ந்து பார்த்தால் மழைபெய்து செழிப்புற்று இருக்கின்றபொழுது அவை யாவும் ஆனந்தத்தில் திளைத்திருப்பவை போன்று தென்படுகின்றன. மற்று மழை பெய்யாது பூமி முழுதும் காய்ந்து கிடக்கின்றபொழுது அதே மரம் செடி கொடி வகைகள் வாடி இருப்பதைப் பார்க்கிறோம். வாட்டம் என்பது ஆனந்தத்தின் எதிர்மறைத் தோற்றமாம். இனி ஜங்கமமாயுள்ள ஈ, எறும்பு வகைகளையும் பறவைகளையும், விலங்குகளையும் ஆராய்ந்து பார்த்தால் சிற்சில வேளைகளில் அவையாவும் இன்பத்தில் மூழ்கியிருப்பதைப் பார்க்கிறோம். வேறு சில வேளைகளில் அவைகள் சோர்வுற்றுக்கிடக்கின்றன. அப்படிக் கிடப்பது ஆனந்தத்தின் எதிர்மறைத் தோற்றமாம். இவையாவுக்கும் மேலாக மக்கள் மாறி மாறி இன்பதுன்பங்களுக்கு இலக்காவதைப் பார்க்கிறோம். இன்புற்று இருக்கிறபொழுது மக்களுடைய நிஜசொருபமாகிய அம்பிகையின் ஆனந்தத்தில் மூழ்கியிருக்கிறார்கள். அவர்கள் விசனப்படுகிறபொழுது மாயையின் வல்லமையால் அவர்களின் ஆனந்த சொருபம் மறைத்து வைக்கப்படுகிறது. அப்படி ஆனந்தம் மறைந்திருப்பது அதன் எதிர்மறைத் தோற்றமாம். ஆனந்தத்தையே உயிர்களனைத்தும் நாடி நிற்கின்றன. ஏனென்றால் ஆனந்த சொருபிணியாகிய அம்பிகையின் புறத்தோற்றங்களாக ஜீவகோடிகளனைத்தும் வடிவெடுத்து இருக்கின்றன. ஆனந்தத்துக்கு அன்னியமாக எவ்வுயிரும் அமைக்கப்பெறவில்லை. ஆனந்தத்திலே தோன்றி ஆனந்தத்திலேயே அவையாவும் நிலைபெற்றிருக்கின்றன. உயிர்வகைகளனைத்தும் கால, தேச, நிமித்தத்தில் கட்டுண்டு இருக்கின்றன. ஆகலால் அவைகளின் சத் சொருபமும், ஆனந்த சொருபமும் எல்லையில் அடங்கியவைகளாக இருக்கின்றன. ஆனால் அன்னை பராசக்தியோ எல்லை மருவாத ஸத்சொருபிணியாயாகவும், ஆனந்த சொருபிணியாகவும் இலங்கிக்கொண்டிக்கிறாள் என்பது இந்த நாமத்தின் கருத்து.

647. लोपामुद्रार्चिता லோபாமுத்ரார்ச்சிதா— லோபா முத்ரையினால் ஆராதிக்கப்பட்டவள் என்பது இதன் பொருள்.

அகஸ்திய முனிவருடைய தர்ம பத்தினிக்கு லோபாமுத்ரை என்னும் பெயர் கொடுக்கப் பட்டிருந்தது. அம்பிகை உபாசனையால் அவள் தலைசிறந்தவளாகத் திகழ்ந்திருந்தாள். அம்பிகையை அவள் ஆராதித்து வந்தது உலக மக்களுக்கு முன் மாதிரியாய் அமைந்திருந்தது. சிவ பக்தர்களுக்குச் சிவனைப்பற்றி எடுத்துச் சொல்லுங்கால் மார்க்கண்டனால் வழுத்தப் பட்டவர் என்று சொன்னால் அதில் பொருள் மிகப் புதைந்திருக்கிறது. மார்க்கண்டன் சிவனை எப்படி வழுத்தினனோ அப்படி மற்றவர்களும் அப்பரமனை வழுத்தவேண்டும் என்று அவர்கள் தூண்டப்படுகிறார்கள். அதே விதத்தில் லோபாமுத்ரையானவள் அம்பிகையை எப்படி ஆராதித்தாளோ அப்படியே ஏனைய அம்பிகை உபாசகர்களும் செய்யவேண்டும் என்னும் கருத்து இதில் அடங்கியிருக்கிறது.

வழிபாட்டுக்குச் சின்னமாக உபாயங்களும் பல அமைந்திருக்கின்றன. அவைகளுள் முத்திரைகள் என்னும் சின்னங்கள் நல்ல உபாயங்களாக அமைந்திருக்கின்றன. சின் முத்திரைக்கு நிகராக லோபா முத்திரை என்று ஒன்று இருக்கிறது. ஞானமே வடிவெடுத்திருப்பது லோபா முத்திரை. யாரெல்லாம் ஞானத்தை வளர்க்கிறார்களோ அவர்கள் எல்லாரும் தாம் தாம் பெற்றுள்ள ஞானத்தின் வாயிலாக அம்பிகையை நன்கு ஆராதிக்கிறார்கள் என்பது கோட்பாடு. இக்கருத்துக்கும் விளக்கமாக லோபா முத்ரார்ச்சிதா என்னும் நாமம் அம்பிகைக்கு அமைந்திருக்கிறது.

648. लीलाक्लृप्त ब्रह्माण्ड मण्डला — **லீலாக்ளுப்த பிரம்மாண்ட மண்டலா** — பிரம்மாண்ட மண்டலங்களை எல்லாம் விளையாட்டாகத்தோற்றுவித்திருப்பவள் என்பது இதன் பொருள்.

சாதிக்கவேண்டிய காரியம் ஒன்று எவ்வளவுக்கெவ்வளவு பெரியதோ அவ்வளவுக்கவ்வளவு அதன்பொருட்டுச் சிரமம்எடுத்துக்கொண்டாக வேண்டும். சிரமப்படாது பெரியகாரியம் எதையும் சாதிக்கமுடியாது. படாத பாடு பட்டுச் செயல் ஒன்றைப் பூர்த்திபண்ணுகிற பொழுதுபகீரதப்பிரயத்தனம் பண்ணவேண்டி வந்தது என்று சொல்லுகிறோம். அதிசயங்களுள் பேரதிசயமாயிருப்பது அண்டங்களின் தோற்றமும் நடைமுறையுமாம். அவைகளைத் தோற்றுவிக்கவும், முறையாக நடாத்துதற்கும் அம்பிகை பெரிய பிரயத்தனம் எடுத்துக் கொள்ளுகிறாளா என்னும் கேள்வி பிறக்கிறது. சிறிதேனும் சிரமப்படாது ஒரு காரியத்தை நிறைவேற்றுகிறபொழுது அது விளையாட்டாக நிறைவேறிவிட்டது என்று சொல்லுகிறோம். சரியான விளையாட்டில் சிரமம் ஏதுமில்லை. நெற்றி வியர்வை நிலத்தில் விழ ஓடியாடி விளையாடுவது சிரமப்படுவதுபோன்று தோன்றுகிறது. ஆனால் நன்கு விளையாடத் தெரிந்தவனுக்கு எவ்வளவுதான் ஓடியாடினாலும் அதில் சிரமம் தோன்றாது. அங்ஙனம் விளையாட்டுப்போன்று அம்பிகை அண்டகோடிகளைத் தோற்றுவித்தும், அவைகளைநிர்மாணித்தும் வருகின்றாள். இவ்வளவு பெரிய காரியம் எப்படி விளையாட்டாக நடைபெறக் கூடும் என்னும் ஐயம் நமக்கு உண்டாகிறது. அந்த ஐயத்தை அகற்றுதல் பொருட்டு நம்மிடத்து ஆற்றல் ஒன்றை அம்பிகை வைத்துள்ளாள். பகல் வேளையிலே நனவிலே நாம் காண்கின்ற உலகங்களையும், செய்கிற செயல்களையும் இரவிலே தூங்குகிற பொழுது கனவில் நாம் செய்து சாதிக்கிறோம். கனவு உலகைக் கற்பிப்பதில் நமக்கு சிரமம் ஏதேனும் உண்டா? கனவு உலகைக் கற்பிப்பதில் எந்தமானுடனுக்கும் எந்தவிதமான சிரமமும் கிடையாது. கற்றவன், மற்றவன், ஏழை, செல்வம் படைத்தவன், மெலிந்திருப்பவன், உறுதி படைத்திருப்பவன், சின்னஞ்சிறுவன், வயது முதிர்ந்தவன், நோயாளியாயிருப்பவன், ஆரோக்கியமாயிருப்பவன் ஆகிய மக்கள் எல்லாரும் அவரவர்பாங்குக் கேற்பப் பல பல உலகங்களைச் சிரமம் எடுத்துக்கொள்ளாது கனவில் உண்டு பண்ணுகின்றனர். கனவுஉலகத்தைத்தோற்றுவிப்பது எவ்வளவு எளிதோ எவ்வளவு விளையாட்டுப் போன்று அமைகின்றதோ அவ்வளவு எளிதாக, விளையாட்டாக அம்பிகை அண்டங்கள் யாவையும் உண்டுபண்ணியிருக்கின்றாள். அதேவிதத்தில் அவைகளை முறையாக நடாத்துதலிலும் அவளுடையமகிமை வெளியாகிறது. அம்பிகையின் இத்தகைய அரிய விளையாட்டை ரசிப்பது அவளுடைய ஆராதனையாகிறது என்னும்கோட்பாட்டைஇந்த நாமம் விளக்குகிறது.

**649. अदृश्या அத்ருச்யா** — பார்வைக்கு எட்டாதவள் என்பது இதன் பொருள்.

அம்பிகையினிடத்திலுள்ள மகிமைகளுள் அவள் பார்வைக்கு எட்டாதவளாக இருப்பது முக்கியமானதாகிறது. பெரிய கட்டடம் ஒன்று கட்டினால் அது இன்னாரால் கட்டுவிக்கப்பட்டது என்ற விளம்பரத்தையும் அக்கட்டடத்தில் காண்கின்றோம். கட்டுவித்த மனிதனும் காட்சிக்கு எட்டியவனாக இருக்கிறான். அண்டகோடிகளைத் தோன்றா நிலையிலிருந்து தோற்றத்துக்குக் கொண்டுவந்துள்ளவள் அம்பிகை. அதைக் குறித்து அவள் எங்கேயாவது விளம்பரம் பண்ணியிருக்கிறாளா? அதுவும் கிடையாது. வீட்டைக் கட்டுவித்த மானுடனைக் காணுவது போன்று அண்டங்களைத் தோற்றுவித்த அம்பிகையை ஊனக்கண்கொண்டு காணமுடியுமா? அதுவும் சாத்தியமன்று. தன்னைத் தோன்றாத நிலையில் வைத்துக் கொண்டு அண்டங்களைத் தோற்றுவிக்கின்றாள். தன்னை எவ்விதத்திலும் விளம்பரப் படுத்தாது மறைமுகமாக இருந்துகொண்டு அவளுடைய கிருத்தியங்களை நிறைவேற்றுகின்றாள். கட்புலனாகாததினால் பரதேவதை என்னும் பொருள் ஒன்று இல்லையென்று நிரூபிக்க நமக்கு இயலுமா?

நவீனக் கல்விகற்றுள்ள மாணக்கனொருவன் சான்றோர் ஒருவரிடம் சென்றான். தன்னுடைய அறிவுத் திறனையும் ஆராய்ச்சித் திறனையும் அவரிடம் ஆடம்பரமாக வெளிப்படுத்தினான். கடவுள் என்னும் பொருள் இல்லவே இல்லை. இருந்தால் அதை எனக்குக் காட்டமுடியுமா? கற்பனைப் பொருளினிடத்து வீணாக இவ்வளவு கருத்தைச் செலுத்துவானேன்—இப்படியெல்லாம் ஆர்வத்தோடு அவன் பேசி முடித்தான். அன்னவனுடைய பேச்சு முடிவுக்கு வந்ததும் சான்றோர் அவனுடைய கன்னத்தில் ஓங்கி அறைந்தார். என்னை ஏன் அடிக்கிறீர்கள் என்று மாணக்கன் கேட்டான். அடித்ததில் என்ன கெட்டுப்போயிற்று என்று சான்றோர் பதில் சொன்னார். எனக்கு வலிக்கிறது என்றான் இளைஞன். 'எங்கே வலியைக் காட்டு பார்க்கலாம்' என்றார் அடித்தவர். வலியை எப்படிக் காட்ட முடியும்? என்று இளைஞன் தடை கூறினான். அடே, உன் அனுபவத்திலுள்ள வலியைக் காட்ட உனக்கு இயலவில்லை. இந்திரியங்களுக்கு எட்டாத பொருளை எப்படியடா இந்திரியங்களுக்கு எட்டும்படி செய்வது? என்றார் சான்றோர். அச்செயல் அவனைச் சிந்தையில் ஆழ்த்தியது. கண்ணுக்குப் புலப்படாத ஒன்று இல்லையென்று வாதிப்பது பொருளற்றது. பசி தாகம் கட்புலனாவதில்லை. உடலில் கிளம்பிய வலி கட்புலனாவதில்லை. அதை முன்னிட்டுப் பசி தாகம் இல்லையென்றோ, வலி இல்லையென்றோ இயம்புவது பொருந்தாது. நீராவி தோன்றா நிலையிலிருக்கிறது. மேகமாக வடிவெடுக்கிறபொழுது அது தோற்றத்துக்கு வருகிறது. கட்புலனாகாத பரவஸ்துவே கட்புலனாகின்ற பிரபஞ்சமாகப் பரிணமித்துள்ளது. தோன்றா நிலையில் அது இல்லையென்று வாதிப்பது பொருந்தாது. அப் பரதேவதை நம் அனைவரிடத்தும் சத் சித் ஆனந்தமாக அமைந்திருக்கிறது. அதனுடைய அறிவு சொரூபம் காட்சிக்கு எட்டுவதன்று. அதனுடைய ஆனந்த சொரூபமும் காட்சிக்கு எட்டுவதில்லை. காட்சிக்கு எட்டாததினால் அறிவு இல்லை, ஆனந்தமில்லை என்று இயம்புவது பொருந்தாது. அத்ருச்யா-கண் பார்வைக்கு எட்டாதவள் அம்பிகை என்று சொல்லுவதின் வாயிலாகப் பஞ்சேந்திரியங்களுக்கு அவள் இலக்கு ஆகமாட்டாள் என்னும் கோட்பாடு அமைந்திருக்கிறது. கருவி கரணங்களைத் தாண்டிச் செல்ல நமக்கு இயலும். என்றைக்கு நாம் அப்பேரியல்பை அடையப்பெறுகிறோமோ அன்றைக்கு அம்பிகையின் சாந்நித்தியத்தை அகக் கண்ணால் நாம் அறிந்துகொள்ள முடியும் என்பது தேற்றம். பஞ்சேந்திரியங்களுக்கு எட்டாதவளை ஞானக்கண்கொண்டு காண்பது இயல்பு. அதுவே முறையும் ஆகும். அதன்பொருட்டுப் பஞ்சேந்திரியங்களை அம்பிகையின் ஆராதனைக்குப் பயன்படுத்த வேண்டும். சுகபோகத்துக்காக அவைகளைப் பயன்படுத்தலாகாது. வழிபாட்டுக்காகவென்று அவைகளைப் பயன்படுத்துவதே ஞானக் கண்ணைப் பெறுவதற்கு உற்ற உபாயமாகிறது. இந்திரியங்களுக்குப் புலனாகாதவளெனினும், ஞானக்கண்ணுக்குப் புலனாவாள் என்பது அத்ருச்யா என்னும் நாமத்தின் கருத்தாகும்.

---

# ஸத் ஸம்பாஷணை

கேள்வி: (149) *அகல்யையை இந்திரன் ஏமாற்றினான். அவள் இதற்குப் பொறுப்பு இல்லாதிருந்தும் அவளைக் கல்லாக்கியது நியாயமாகுமா?*

கௌதம முனிவருடைய ஆஸ்ரமம் மிதிலா புரிக்குப் பக்கத்தில் இருந்தது. அந்த கௌதம முனிவருடைய தர்மபத்தினியின் பெயர் அகல்யை. அவள் கட்டழகே வடிவெடுத்த வளாக இருந்தாள். பெண்பால் ஒருத்திக்கு அழகு ஒரு விதத்தில் பூஷணம் ஆகிறது. மற்றொரு விதத்தில் அது பேரிடைஞ்சலாகக் குறுக்கிடுகிறது. இது எக்காலத்திலும் மக்கள் எல்லார்க்கும் பொதுவாயுள்ள கோட்பாடாகிறது. அகல்யையின் அழகைப் பார்த்து தேவேந்திரன் மயங்கினான். பிறன்மனை விழைதல் பொல்லாதது. ஆயினும் அப்பொல்லாங்கு அவனுக்கு உசிதமானதாகத் தோன்றியது. காமத்தின் போக்கு அத்தகையது. தன் வடிவத்தை மாற்றிக் கொள்ளும் திறமை அவனிடத்திருந்தது. எனவே பொருந்தாத தீர்மானம் ஒன்றை அவன் செய்தான். அகல்யையின் கணவனாகிய கௌதம முனிவர் ஏதோ காரியமாக வெளியே போயிருந்த பொழுது அந்த முனிவர் போன்று வடிவெடுத்து வந்து இந்திரன் அகல்யையைப் புணர்ந்தான். ஆயினும் அவன் தப்பித்துக் கொள்ளவில்லை. நிகழ்ந்ததை கௌதம முனிவர் உடனடியாகக் கண்டுபிடித்து விட்டார். அவருக்குச் சீற்றம் கிளம்பியது. நெறிவழுவிய இருவருக்கும் சாபம் போட்டார். இந்திரனுடைய மேனி முழுதும் கணக்கற்ற யோனிகள் மயமாக வேண்டுமென்பது இந்திரன் மீது போட்ட சாபம். அகல்யை கல்லாகக் கடவது என்பது மனைவியின் மீது போட்ட சாபம். அறியாமையினால் இந்தப் பாபச்செயலுக்கு இலக்கு ஆகிய தனக்கு விமோசனம் ஏதுமில்லையா என்று அகல்யை கெஞ்சிக் கேட்டாள். திரேதா யுகத்தில் அவதரித்து வருகிற தசரத ராமனுடைய திருவடிபட்டால் அவள் பழையபடி பெண் ஆவாள் என்று கௌதம முனிவர் பகர்ந்தது தக்க காலம் வரும்பொழுது அவள் உய்வு அடைவதற்கு உபாயம் ஆயிற்று. கோபித்துக் கொண்ட கௌதமமுனி தவத்துக்காக இமய மலைச் சாரலுக்குச் சென்றுவிட்டார்.

குற்றமற்ற அகல்யைக்கு இத்தகைய சாபம் வாய்த்தது நியாயமா என்பது கேள்வி. அவள் குற்றமற்றவளாயிருந்தாலும் நிகழ்ந்ததைக் கண்டுபிடித்த கணவன் கோபிக்காது இருக்க முடியாது. கௌதமர் நடந்துகொண்டது அவருடைய மனப்பான்மைக்கு ஏற்றபடி முற்றிலும் பொருத்தமானதே. அகல்யை சாபத்துக்கு இலக்கு ஆவதைத் தவிர வேறு வழியில்லை, சாதாரணமான உலக மக்களுடைய நிலையில் வைத்துப்பார்க்குமிடத்து அவள் குற்றமற்றவளே. குற்றமற்றவளாக இருந்தாலும் நிகழ்ந்ததைக் கண்டுபிடித்த கணவன் தக்க தண்டனை தராது விட்டுவிட மாட்டான். அகல்யை சாதாரணமான மங்கை அல்லள். அவள் ஆழ்ந்து தவத்தில் ஈடுபட்டவள். தவத்தில் ஈடுபடுகிறவர்களுக்கு அசாதாரணமான ஆற்றல்கள் உருவெடுக்கின்றன. இந்த இடத்துக்குச் சான்றுஒன்று எடுத்துக்கொள்ளுவது அவசியமாகிறது. தன் எஜமானன் எந்த வடிவெடுத்துவந்தாலும், எந்த வேஷம் போட்டுவந்தாலும், நாய் ஒன்று அவனை மோப்பத்தால் அறிந்துகொள்ளுகிறது. அந்தமோப்பத் திறமை நாய்க்கு உண்டு. சாதாரணமான மனிதனுக்கு அது இல்லை. தவத்தில் மேலோங்கியவர்களுக்குச்சாதாரணமானநிகழ்ச்சி விளங்கிவிடுகிறது. அகல்யை முழுதும் பண்பட்டவளாயிருந்திருப்பாளாகில் இந்திரனுடைய சூழ்ச்சியை அவள் எளிதில் கண்டு பிடித்திருக்கக் கூடும். அத்தகைய திறமை அவளுக்கு வாய்க்கவில்லை என்பது வெளிப்படை. ஆயினும் வேறு எந்த ஆடவனையும் காமக்கண் கொண்டு பார்க்கும் குறைநிலை அவளிடத்தில்லை. அவள் ஏமாற்றப்பட்டாள். அதை முன்னிட்டு கௌதமர் அவளை மன்னிக்க முடியாது. அவர் சபித்தது முறையே. ஏமாற்றமடைந்தவர்கள் யாராயிருந்தாலும் ஏமாற்றத்திற்கேற்றவாறு துன்பத்திற்கு ஆளாகியே தீரவேண்டும். அதைத் தவிர்க்க முடியாது. ஆக அகல்யைக்கு அனுதாபம் காட்டுவது பொருந்தாது.

சிலர்க்குப் பாபச்செயல் வலிய வந்து சேருகிறது. தம்மளவில் அவர்கள் நல்லவர்களாயிருந்தாலும் சூழ்நிலையின் விளைவாகத் தீச்செயலுக்கு அவர்கள் இலக்கு ஆகிறார்கள். இது இயற்கையிலுள்ள குறைபாடு. அகல்யைக்கு நிகழ்ந்ததைவிட நெருக்கடியான நிலையில் பாகிஸ்தானில் வாழ்ந்து வருகிற இந்து மாதர்கள் இருக்கிறார்கள். முரடர்கள் பலாத்காரமாக அவர்களைத் தூக்கிச் சென்று கற்பழிக்கிறார்கள். அன்னவர்களை மீட்டெடுப்பதா அல்லது விதி வசத்துக்கு ஆளாக்குவதா என்பது பெரிய கேள்வி. அகல்யை பரிசுத்தப் படுத்தப்பட்டு மீண்டும் முனிவரால் ஏற்றுக் கொள்ளப்பட்டாள். அத்தகைய முறையை குற்றமற்ற இந்து மாதர்கள் விஷயத்திலும் கையாளுவது அவசியமாகிறது.

இந்த நிகழ்ச்சியில் அரியதொரு தத்துவம் அமைந்திருக்கிறது. அகல்யையின் கஷ்ட தசையின் வாயிலாக அத்தத்துவம் விளக்கப் பெறுகிறது. ஜடசக்தி சித்சக்தி ஆவதும், சித் சக்தி ஜடசக்தி ஆவதும் இயற்கையின் விளையாட்டு. இக்கோட்பாட்டை பர்வதராஜனுடைய புதல்வியாகிய பார்வதி தேவி தன் தவத்தின் வாயிலாக விளக்குகிறாள். கல்லினின்று பிறந்தவள் சிவத்தை மணந்துகொள்வதற்கேற்ற சிவ சைதன்யத்தைத் தவத்தின் வாயிலாகப் பெற்று வருகிறாள். இது இயற்கையின் கூறு. ஜடமாகப் போன அகல்யை சேதனமாக மாறுதற்கேற்ற சூழ்நிலை வாய்க்கும் என்று கௌதமர் பகர்ந்தது இத் தத்துவத்துக்கு விளக்கமாகிறது. தசரத ராமன் புருஷ தத்துவம். ஆத்ம சைதன்யத்தைத் தவிர வேறு ஏதும் அவனிடத்தில் இல்லை. ஆத்ம சைதன்யத்தோடு தொடர்பு வைக்கக் கூடிய ஜீவர்கள் எல்லார்க்கும் ஜடநிலையினின்று விடுபடுதற்கும் சேதனத்தை ஓங்குவிப்பதற்கும் வாய்ப்பு இருக்கிறது என்னும்கோட்பாடு அகல்யையின் விமோசனத்தின் வாயிலாக உலகுக்கு வெளியாகிறது. அஞ்ஞானத்தில் உழலும் ஜீவாத்மாக்கள் எல்லாரும் சாபத்துக்கு உட்பட்ட அகல்யையின் நிலையிலிருக்கிறார்கள். ஆத்ம போதத்தை வளர்ப்பதற்கேற்ப ஜட நிலையினின்று விலகி சேதன சொருபமாக அவர்கள் பழைய நிலையைப் பெறுகின்றனர். ராமனுடைய திருவடிபட்டவுடனே கல்லாகக் கிடந்த அகல்யை பெண்ணாக மாறியது ஆத்மபோதத்துக்கு விளக்கமாகிறது. கௌதமரும் உடனே ஹிமாசலத்திலிருந்து திரும்பி வந்து அகல்யையை ஏற்றுக்கொண்டார். கீழ்மையினின்று ஆத்ம போதத்தின் வாயிலாக மேன்மையுறுகிற ஜீவாத்மாக்கள் எல்லாரும் பரநிலையில் நிலைத்திருக்கிற பெரியோர்களுக்கு உரியவர்களாகிறார்கள் என்பது வெளிப்படை. அகல்யையின் சாபத்தின் வாயிலாக இக்கோட்பாடு வெளியாகிறது.

இராமாயணம், மஹாபாரதம் ஆகிய இரண்டு இதிகாசங்களும் தர்மத்துக்கு விளக்கமாகக் அமைந்துள்ளன. தர்மமோ வெவ்வேறு சூழ்நிலைகளில் வெவ்வேறு வடிவெடுத்திருப்பது பொது மக்கள் எல்லார்க்கும் விளங்குவதில்லை. விளங்காத கடினமான நிலையிலுள்ள தர்மத்தை விளக்குதற்கென்றே இந்த இரண்டு நூல்களும் அமைந்திருக்கின்றன. சமுதாயத்தில் அப்போதைக்கப்போது உண்டாகின்ற பிரச்னைகளை அகற்றி வைப்பதற்கு இந்நூல்கள் பிரமாணமாக அமைந்திருக்கின்றன. எப்பொழுதாவது மாது ஒருத்தி சூழ்நிலையின் காரணமாகக் கற்பை இழக்கநேரிடுகிறது. அத்தகையவளை சமுதாயம் ஒதுக்கித் தள்ளுவதா அல்லது பொருத்தமான முறையொன்றைக் கையாண்டு அவளை மீட்டெடுத்துக் கொள்ளுவதா என்னும் கேள்வி வருகிறது. மீட்டெடுப்பதுதான் முறை என்பதற்கு இந்த நிகழ்ச்சி சான்று ஆகிறது. இடைக்காலத்திலிருந்த இந்துக்கள் அத்தகைய அனுதாபமான மனப்பான்மை படைத்திருக்கவில்லை. அதை முன்விட்டு இந்து மதத்தில் பிறந்து வளர்ந்த மங்கையர்கள் பலர் ஹிந்துக்களால் கைவிடப்பட்டுப் புறமதங்களாகிய இஸ்லாமிய மதத்தையோ, கிறிஸ்துவ மதத்தையோ தழுவ வேண்டியது நேர்ந்தது. அங்ஙனம் அவர்களைப் புறக்கணித்தது ஹிநதுக்கள் செய்த கொடுரச் செயலாகும். மற்று அங்ஙனம் வீழ்ந்த மாதர்களை மீட்டெடுத்துக் கொஞ்சகாலம் தவத்தில் ஈடுபடச் செய்து பிறகு சமுதாயத்தில் சேர்த்துக் கொள்ளுவதே பொருத்தமான செயலாகும். அப்படிச் செய்வது அன்புக்கும் அனுதாபத்துக்கும் அறிகுறியாகும்.

# சுந்தரர் வாக்கு

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன்)

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் நெஞ்சத்தை நெகிழவைக்கும் தேவாரம் பாடியருளியவர்களாவார்கள்.

இம்மூவரும் பாடிய அருட்பாடல்களைத் தேவாரம் எனப் பொதுவாக வழங்குவார்கள்.

திருஞானசம்பந்தர் பாடிய பாடல்களைத் "திருக்கடைக் காப்பு" என்பார்கள். திருநாவுக்கரசர் பாடிய பாடல்களைத் "தேவாரம்" என்பார்கள். சுந்தரர் பாடிய பாடல்களைத் "திருப்பாட்டு" என்பார்கள். இப்படிச் சொல்லக் கூடிய ஒரு மரபும் உண்டு.

பாடுகின்ற எல்லாப் பாடல்களுமே திருப்பாட்டா? இல்லையே! "உள்ள நெகிழ்ச்சியுடன், இறை உண்மை அனுபவத்தை எடுத்து விளக்கும் பாடல்கள் திருப்பாட்டுக்கள் எனப்படும்.

சுந்தரர் செந்தமிழில் பாடியவை உள்ள நெகிழ்ச்சியோடு பாடப்பட்டவை. இறை உண்மையை எடுத்து விளக்கும் அனுபவப் பாடல்கள் "கருணாரசம்" எனப்படும் பக்திச் சுவை, தோழமை உணர்வோடு இறைமையை விளக்கும் இயல்பு ஆகியவை சுந்தரர் பாடல்களில் பொதிந்துள்ளன.

சுந்தரர் வரலாற்றை இங்கே சுருக்கமாக நினைவுக்குக் கொண்டுவருதல் அவர் பாடல்களின் போக்கைப் புரிந்துகொள்ள உதவும்.

திருக்கைலாய மலையில் சிவபெருமானுக்குப் பணியாளாக விளங்கியவர் ஆலால சுந்தரர் என்பவர். ஆங்கே உமையம்மைக்குப் பணிப் பெண்களாக விளங்கியவர்கள் கமலினி, அனிந்திதை ஆகிய இருவரும் ஆவர். ஆலால சுந்தரர் மலர் கொய்ய மலர்வனம் சென்றார். அதே பணிக்கு அப்பெண்டிர் இருவரும் வந்தனர். இவர் அவர்களை விரும்பினர். சிவபெருமான் அறிந்தார். 'மாதர்மேல் மனம் வைத்தாய். ஆகவே, பூவுலகில் பிறந்து, அவ்விருவரையும் மணந்து சிலநாள் இருந்து மீண்டும் இங்கு வருக" என ஆணையிட்டார்.

ஆலால சுந்தரர் அஞ்சி இறைவனை வணங்கி, "திருமணம் செய்து இல்லற வாழ்வில் ஈடுபடாமல் என்னைத் தடுத்து ஆட்கொள்ள வேண்டும் ஐயனே!" என இறைஞ்சினர். பெருமானும் அவ்வாறே வரம் கொடுத்தார்.

தென்னாற்காடு மாவட்டத்தில் திருநாவலூர் என்ற தலம் உள்ளது. இத்தலத்தில், ஆதி சைவ மரபிலே தோன்றிய சடையனார் தம் மனைவி இசைஞானியருடன் இல்லறவாழ்வு நடத்திவந்தார். ஆலால சுந்தரர் இவர்களுக்கு மகவாக வந்து தோன்றினர். பெற்றோர் இவருக்கு ஆரூரர் எனப் பெயர் இட்டு வளர்த்து வந்தனர்.

திருமுனைப்பாடி நாட்டு அரசர் நரசிங்க முனையர் என்பவர். இவருக்கு மகப்பேறு இல்லை. குழந்தை ஆரூரரின் திருமுகப் பொலிவைக் கண்ட அரசர், தம் வளர்ப்புப் பிள்ளையாகத் தருமாறு பெற்றோரிடம் வேண்டிப் பெற்றார்.

ஆரூரருக்குத் திருமணப் பருவம் வந்தது. சடங்கவி சிவாசாரியார் என்பவர் திருமகளை மணம் பேசினர்கள். திருமண நாளன்று யாரும் எதிர்பாராத நிகழ்ச்சி ஒன்று நடந்தது. திருமண நேரத்தில், மணப்பலகையில் சுந்தரர் அமர்ந்திருந்தார். அப்போது சிவபெருமான் கிழ வேதியர் வடிவம் கொண்டு வந்து, சுந்தரர் தமக்கு அடிமையாவார் என்று கூறினர். அவ்வாறு அடிமை எனச் சொல்லுவதற்கு ஆதாரமாகச் சுந்தரரின் பாட்டனர் எழுதிக் கையெழுத்திட்டுக் கொடுத்துள்ளதாகச் சொல்லப்படும் அடிமை ஓலைச் சாசனத்தை வேதியர் காட்டினர்.

சினம் கொண்ட ஆரூரர், அவ்வோலையைப் பறித்துக் கிழித்து எறிந்தார். அவர் அவ்வாறு கிழித்து எறிந்தாலும் அதற்கு மூலவோலை தம்மிடம் இருப்பதாக வேதியர் சொன்னர். பிறகு, திருவெண்ணெய் நல்லூர் ஊர்ச் சபையினர் முன்னிலையில் வேதியர் தமது மூல ஓலையைக் காட்டினர். ஆரூரர் அவருக்கு வழி வழி அடிமை என்பது உறுதியாயிற்று. தாம் வந்து அடிமை வேலை செய்வதற்கு முதியவரின் இல்லத்தைக் காட்டுமாறு ஆரூரர் கேட்டார். உடனே, முதியவர் ஆரூரரை, அவ்வூர்க்கோயிலாகிய "திரு அருள் துறை" க்கு அழைத்துச் சென்றார். மூலஸ்தானத்துக்குள் சென்ற முதிய

வர் மாயமாய் மறைந்தார். பிறகு உமையம்மையுடன் ரிஷப வாகனத்தில் காட்சி கொடுத்தார்.

"எம்பெருமானே! நீயோ கிழவேதியனுக வந்து என்னேடு வாதிட்டாய்! நான் திருமணம் செய்து உலக வாழ்க்கையில் உழலாதவாறு தடுத்து ஆட்கொண்டாய். உன்னைப் பித்தன் எனவும், பேயன் எனவும் பிழைபடப் பேசினேனே" என ஆரூரர் மனம் வருந்தினர்.

'நமக்கு உகந்தது அர்ச்சனைப் பாட்டேயாகும். செந்தமிழால் என்னைப் பாடுக. பித்தன் என என்னை ஏசினுய். பித்தா என்றே தொடங்கி என்னைப் பாடுவாயாக" எனக் கூறியருளினர் சிவபெருமான்.

"பித்தா பிறைசூடிபெருமானே அருளாளா" எனத் துவங்கிச் சுந்தரர் பதிகம் பாடினர். தலங்கள் தோறும் சென்று எம்பெருமானைப் போற்றிப் பதிகங்கள் பாடினர். திருவதிகை வீரட்டானம் என்னும் தலத்தில் சிவபெருமானின் திருவடி தீட்சையினைப் பெற்ருர். திருவாரூரில் பரவையார் என்பவரை மணந்தார். அங்கேயே திருத்தொண்டத் தொகை என்ற நூலை அருளிச் செய்தார். குண்டையூரில் சிவபெருமான் அருளால் ஏழைகளுக்கு வழங்க நெல் பெற்ருர். திருவையாற்றில் ஆற்றுநீர் விலகி வழிவிடச் செய்தார். திருப்புகலூரில் செங்கல்லை மாற்றிப் பொன்னுக்கினர். திருமுதுகுன்றம் என்னும் விருத்தாசலத்தில், ஆற்றில் போட்ட பொன்னைத் திருவாரூர்க் கமலாலயம் குளத்தில் எடுத்தார். திருவொற்றியூரில் சங்கிலியார் என்பவரை இரண்டாம் தாரமாக மணந்தார். திருப்புக் கொளியூர் அவிநாசியில், முதலை விழுங்கிய பாலகனை மீண்டும்உயிரோடு வரச் செய்தார்.

இவ்வாறு பல அற்புதங்களைச் செய்த சுந்தரர் சேர நாடு சென்று, சேரமான் பெருமாள் நாயனுரைக் கண்டு அளவளாவி, அங்கேயே தமது பதினெட்டாம் வயதில், ஆடி மாதம் சுவாதி நாளில், வெள்ளையானையின் மீது ஏறித் திருக்கயிலை அடைந்தார். இவர் கி. பி. எட்டாம் நூற்ருண்டில் வாழ்ந்தவர். சம்பந்தர், அப்பர், மணிவாசகர் முதலானேர் இவருக்கு முன்பு வாழ்ந்தவர்கள்.

இவரைப்பற்றிய வரலாற்றுச் சான்றுகள், இவர் தேவாரம் பாடியதற்கான சான்றுகள் கல்வெட்டுகளாகவும், செப்புப் பட்டயங்களாகவும், ஆன்ருேர் வாக்குகளாகவும் நமக்குக் கிடைத்துள்ளன.

சுந்தரர் நூறு பதிகங்கள் பாடியுள்ளார். ஒரு பதிகத்தில் பெரும்பாலும் பத்துப் பாடல்கள் இருக்கும். சம்பந்தர் பதிகத்தில் பதினெரு பாடல்கள் அமைந்திருக்கும். சுந்தரர் பாடிய பதிகங்களுள் சில பதினெரு பாடல்களைக் கொண்டு விளங்குதலைக் காணலாம்.

இறைவனை அடைவதற்குப் பல வழிகள் உள்ளன என்பது உண்மையே. ஆயினும் அடியார்கள் பலர் பின்பற்றிய வழிகளை நான்கு வகைகளாகப் பாகுபாடு செய்துள்ளனர். நன்மகன்மை நெறி [சற்புத்திர மார்க்கம்], தொண்டு நெறி [தாச மார்க்கம்], தோழமை நெறி [சகமார்க்கம்],மெய்ம்மை நெறி [சன்மார்க்கம்] ஆகியவை அந்நெறிகள் ஆகும்.

இறைவனைத் தந்தையாகவும், தன்னை மகனுகவும் பாவித்து அன்பு பூண்டு ஒழுகிய நெறி சற்புத்திர மார்க்கம். இறைவனைத் தலைவனுகவும், தன்னைப் பணியாளாகவும் கொண்டு ஒழுகும் நெறி தாசமார்க்கம். இறைவனைத் தோழனுகப் பாவித்து நடக்கின்ற நெறி சக மார்க்கம். கடவுளை அருள் குருவாகக்கொண்டு, அவன் அருள் ஆணைவழியே நடப்பது சன் மார்க்கம்.

இறைவனைத் தோழனுகப் பாவித்துச் சுந்தரர் நடந்தார். ஆதலின் அவர் மேற்கொண்டொழுகிய நெறியைச் சகமார்க்கம் என்பார்கள். இறைவனை நோக்கித் தந்துதான் ஆக வேண்டும் என்று தோழமை உரிமையுடன் கண்டிப்புடன் கேட்பதாகச் சுந்தரர் பாடல்கள் பாடுவார். நண்பர் வேறு நாம் வேறு என்ற உணர்வு இல்லாமல், நாமும் அவரும் ஒருவரே என்ற தோழமை உணர்வு எழுகின்ற இடத்தில்தான், உரிமையோடு கேட்கக்கூடிய நியாயம் தோன்றும்.

இறைவன் வேறு; தாம் வேறு எனச் சுந்தரர் நினைக்கவில்லை. அவரும் தாமும் ஒருவரே என்ற ஐக்கிய உணர்வு சுந்தரர் உள்ளத்தில் நிலைபெற்றிருந்தது.

சுந்தரருக்குச் சுந்தரர் என்ற பெயருடன் நம்பி ஆரூரர், ஆரூரர், திருநாவலூரர், வன்ருெண்டர் என்ற பெயர்களும் உண்டு.

சுந்தரரைத் திருமணம் செய்துகொள்ளாதபடி சிவபெருமான் தடுத்தாண்டுகொண்ட பிறகு, இறைவன் அழைக்கச் சுந்தரர் திருவெண்ணெய்நல்லூர்த் திருஅருள்துறைக் கோயிலுக்குச் செல்லுகின்றார். இறைவன் உமாதேவியாருடன் தமது திருக்கோலத்தைக் காட்டுகின்றார். இறைவனுடைய திருவருள் செயலை வியந்த சுந்தரர், "இறைவா! உம்மை எங்ஙனம் பாடுவேன்!" என இறைஞ்சுகின்றார்.

"பித்தன்" என்று நீ முன்பு என்னைக் கூறினாய். ஆதலின் பித்தா என்றே பாடுக என இறைவன் அருள்பாலிக்கின்றார். சுந்தரரும் அவ்வாறே பாடுகிறார்.

"பித்தா பிறைசூடி பெருமானே அருளாளா
எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்து
உன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால் வெண்
ணெய் நல்லூர் அருள்துறையுள்
அத்தா உனக்கு ஆளாய்இனி அல்லேன் எனல்
ஆமே."

— பித்தனே! பிறைசூடியவனே! பெருமானே! அருள்நிறைந்தவனே! பெண்ணையாற்றின் தென்பால் உள்ள திருவெண்ணெய் நல்லூரில் உள்ள அருள்துறை என்னும் கோயிலில் எழுந்தருளியுள்ள எம்பெருமானே! என் நெஞ்சுக்குள்ளே உன்னை வைத்தாய்! ஆகவே, நான் உன்னை எப்பொழுதும் மறக்காதவன் ஆகி, முன்பே உனக்கு அடிமையாகிவிட்டேன். அப்படி இருக்க, இப்போது, "நான் உனக்கு எப்படி அடிமையாவேன்" என்று எதிர் வழக்குப் பேசிவிட்டேனே! என்று சொல்லி வருந்திப் பாடுகின்றார்.

சிவபெருமானைப் பித்தன் என்கிறார். பேரருள் உடையவன் பித்தன். அவன் செய்யும் செயல்கள் இப்படிப்பட்டவை என்று பிறரால் உணர்ந்து சொல்ல முடியாது. எல்லாரும் வெறுக்கக்கூடிய ஊமத்தம் பூவை விரும்பி அணிவான்; எலும்பையே மாலையாகப் பூணுவான்; சுடுகாட்டில் உறைவான். ஒரு முறைப்படி செய்யாத பித்தனுடைய செயலும், சிவபெருமான் செயலும் ஒன்றே. அடியார்களுக்கு வேண்டியதைச் செய்வான்; செய்யாமலும் இருப்பான். அல்லது வேறு ஒன்றைச் செய்வான். சிவன் எப்போதும் பிறர் வசப்பட மாட்டான். தன் வசப்படக்கூடியவன்.

ஏற்கெனவே நான் உனக்கு அடிமை; இப்போது நீ வந்து அடிமை என்று உணர்த்தியும் ஏற்றுக்கொள்ளாமல் எதிர் வழக்காடினேனே என வருந்திக் கூறுகின்றார்.

உலகில் யாருக்கும் யாரும் அடிமை இல்லை. அடிமையாக இருக்கவேண்டிய அவசியமும் இல்லை. அரசியலில் அடிமையாக்குவது, சமுதாயத்தில் அடிமையாக்குவது, அலுவலில் அடிமையாக்குவது, பணத்துக்கு அடிமையாக்குவது ஆகிய இவையெல்லாம் அறிவுடையோராலும், பண்புடையோராலும் ஏற்றுக்கொள்ளத் தக்கவையல்ல. அடிமையாக்குவதும் தவறு. அடிமையாவதும் தவறு. இவ்வகையான அடிமைத்தனத்தில் யாதொரு பயனும் இல்லை. காலப்போக்கில் கேடுகளே மிகும் என்பதை அனுபவ வாயிலாக நாம் அறிந்து வருகிறோம்.

நாம் யாருக்கு அடிமையாக வேண்டும்? இறைவனுக்கே அடிமையாக வேண்டும். ஏன்? இறைவன் யாருக்கும் அடிமை ஆகாதவன். பூரண சுதந்தரமானவன். யாருக்கும் அடிமை இல்லாத ஒருவனுக்கு அடிமையாவதே சிறப்பு. "எல்லாம் உன் அடிமையே; எல்லாம் உன் உடைமையே; எல்லாம் உன் செயலே" என்கிறார் அடியார் ஒருவர். "பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்" என்கிறார் கவிஞர் ஒருவர். எனவே, பரிபூரணனாகிய பரம்பொருளுக்கு அடிமையாகி வாழ்வதுதான் ஆன்மா கடைத்தேறுவதற்கு உகந்த வழியாகும்.

"ஊனாய் உயிர் ஆனாய் உடல் ஆனாய்
உலகு ஆனாய்
வானாய் நிலன் ஆனாய் கடல் ஆனாய் மலையானாய்
தேனார் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்
நல்லூர் அருள் துறையுள்
ஆனாய் உனக்கு ஆளாய்இனி அல்லேன்
எனல் ஆமே."

—பெண்ணையாற்றின் தென்கரையில், திருவெண்ணெய் நல்லூரில், அருள்துறைக் கோயிலில் எழுந்தருளியிருப்பவனே! உடலோடு பொருந்தி எல்லாப் பொருள்களையும் உணர வல்ல உயிராக விளங்குபவனே! உடலாகத் திகழ்பவனே! உலகமாகவும், ஆகாயமாகவும்,

நிலமாகவும், கடலாகவும், மலையாகவும் நீ விளங்குகின்றாய். நான் உனக்கு முன்பே அடிமை. இப்போது உன்னை இகழ்ந்து பேசி விட்டேனே! என்கிறார் சுந்தரர்.

ஊனாய் உயிர் ஆனாய்—உடலோடு பொருந்தி யுள்ள உயிராக விளங்குகின்றாய் என இறை வனைப் போற்றுகின்றார். உயிர்கள் பல. உயி ருக்குத் தனியாக உருவமோ நிறமோ இல்லை. உடலோடு கூடித்தான் உயிர் இயங்கும். உயி ரைத் தனியாகக் கண்ணால் காணமுடியாது.

உயிர் தானாகவே தனக்கு விருப்பமான உடம்பை எடுத்துக் கொள்ளாது. எடுத்துக் கொள்ளும் ஆற்றல் அதற்கு இல்லை. அப்படி அதற்கு ஆற்றல் இருக்குமானால், அவரவர்கள் தாங்கள் விரும்பியவாறே அழகான உடலை எடுத்துக் கொள்ளலாமே! விரும்பிய குடும்பத் தில் பிறக்கலாம். எல்லாரும் மானிடப் பிறவி யையே எடுப்பார்கள். விலங்கு, பறவை போன்ற அஃறிணை உயிர்களாக யார்தாம் பிறக்க விரும்புவார்கள்? ஒருவரும் விரும்ப மாட்டார்கள்.

உயிர் உடம்பை எடுத்துப் பிறப்பது அதன் வசம் இல்லை. உயிர் அனாதி. அதாவது உயிர் யாராலும் படைக்கப்படவில்லை என்பது நம் முன்னோர் நம்பிக்கை. கடவுளும் உயிரைப் படைக்கவில்லை. கடவுள் எப்படி அனாதியோ அதுபோல உயிரும் அனாதி. உயிர் செய்த நல் வினை தீவினைகளுக்கு ஏற்றவாறு அதற்கு உடம்பு கிடைக்குமாறு செய்பவன் இறைவன். இறைவன் எல்லா ஆன்மாக்களையும் அறிவான். உயிராகவே அவன் திகழ்கிறான்; உயிருக்கு உயிராகவும் இலங்குகிறான். இறைவன் அறி யாத உடலும் இல்லை. உயிராக இருந்து உடலை இயக்குபவனும் ஈசன்.

உருவம் அற்ற இறைவனுக்குக் கோயில் களிலே மூர்த்தங்கள் அமைத்துள்ளார்களே! ஏன்? இறைவன் உடலாகவும் விளங்குகிறான் என்பதைக் காட்டுவதற்குத்தான்.

"உலகு ஆனாய்"—இந்தப் பிரபஞ்சமாக விளங்குகிறாய். கண்ணுக்குப் புலனாகின்ற ஒரு பொருளை வைத்து, அந்தப்பொருளைப் படைத் தவன் ஒருவன் இருக்கவேண்டும் என்ற முடி வுக்கு வருகிறோம். உலகம் கண்ணுக்குப் புலனாகின்றது. எனவே, இதைப் படைத்த வன் ஒருவன் இருக்கவேண்டும். அவனே கடவுள். கண்ணுக்குத் தெரிகின்ற இந்த ஸ்தூலப் பிரபஞ்சத்தையும், கண்ணுக்குப் புல னாகாமல் விளங்கும் சூட்சும உலகத்தையும் கடவுளே உண்டாக்கினான்.

ஒரு பொருளைப் படைப்பதற்கு அடிப்படை யான மற்றொரு பொருள் இருத்தல் வேண்டும். அதாவது, ஒரு பொருளில் இருந்துதான் மற்றொரு பொருளை உருவாக்கமுடியும். அப் படியானால், இப்பிரபஞ்சமாகிய பொருளைக் கடவுள் எந்த மூலப்பொருளில் இருந்து தோற்றுவித்தான்? இந்தக் கேள்விக்கு எங்கே விடை உள்ளது?

இந்தக் கேள்விக்கு இரண்டு விதமான விடைகள் வேத நூல்களில் சொல்லப்படு கின்றன.

மாயை என்ற ஒரு பொருளில் இருந்து இந்தப் பிரபஞ்சத்தைக் கடவுள் உண்டாக்கி னான் என்பது ஒரு விடை. கடவுள் தன்னிட மிருந்தே இந்தப் பிரபஞ்சத்தை உருவாக்கி னான் என்பது மற்றொரு விடை.

மாயையில் இருந்து உலகைத் தோற்றுவிப் பான் முதல்வன். ஆன்மாக்களுக்குத் தனு, கரண, புவன போகங்களைக்கொடுத்து இன்ப துன்பங்களை அனுபவிக்குமாறு செய்வான். மீண்டும் இவ்வுலகை மாயையுள் ஒடுங்குமாறு செய்வான். இப்படிச் செய்வது ஆண்டவ னுக்கு ஒரு விளையாட்டு. "அலகிலா விளை யாட்டு" எனக் கம்பர் இதனைக் கூறுவார். உயிர்களாகிய ஆன்மாக்கள் அடைகின்ற களைப்பைப் போக்கவும், இன்பதுன்ப நுகர்ச்சி களை அனுபவிக்கச் செய்யவுமே இறைவன் இவ்வாறு திருவிளையாடல் புரிகின்றான்.

கடவுள் தன்னிடம் இருந்துதான் இப்பிர பஞ்சத்தைத் தோற்றுவித்தான். அகண்ட பரி பூரணமாக விளங்கும் கடவுளின் புறத்தோற் றம் இப்பிரபஞ்சம். இப்பிரபஞ்சத்தின் மூலம் ஈசன் தன்னை விளக்கிக் கொண்டிருக்கிறான். இறைவன் இருக்கிறான்; உண்மை. அவனே இவ்வுலகமாகப் பரிணமிக்கிறான்.

உலகம் என்ற ஒன்று இருப்பது ஒருவித மாயத் தோற்றமே. கண்ணாடியில் தோன்று கின்ற பிம்பம் நிஜ பிம்பம் அன்று. அது போலத்தான் இப்பிரபஞ்சமும். நீ காண்பது

உண்மையில் உலகம் அன்று. இறைவனின் விசுவரூபத்தை இந்த வடிவத்தில் பார்க்கிறாய் என்றும் சொல்லுவார்கள்.

இப்படி இரண்டுவிதக் கருத்துக்கள் சொல்லப்படுகின்றன. இரண்டுவிதக் கருத்துக்கள் மட்டுமல்ல, பலவிதமான கருத்துக்கள் சொல்லப்படுகின்றன. வேதங்களில் சொல்லப்பட்ட ஒரு கருத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு, சான்றோர்கள் தங்கள் அறிவுக்கும் அனுபவத்துக்கும் தோன்றியவகையில் விளக்கங்கள் சொல்லியிருக்கிறார்கள்.

"வானாய் நிலன் ஆனாய் கடல் ஆனாய் மலை ஆனாய்" — வானமாகவும், நிலமாகவும், கடலாகவும், மலையாகவும் கடவுள் விளங்குகின்றான். இவை அளவிட முடியாத ஆற்றல் உடையவை. கைபுனைந்து இயற்ற முடியாத கவின் பெறு வனப்பு உடையவை. இவற்றை யாரால் உருவாக்க முடியும்? அளப்பரிய ஆற்றலைத் தன்னகத்தே உடைய கடவுளால்தான் படைக்கமுடியும். இவை இயற்கைப் பொருள்கள். இறைவனும் இயற்கை வடிவினன்.

தமிழ் இலக்கணத்தில் சொல்லப்பட்ட செய்திகளுள் ஒன்று இவ்விடத்தில் நினைவு கொள்ளத் தகும். இறந்த காலத்தில் நிகழ்ந்த செய்தியைச் சொல்லும் வாக்கியம் இறந்த காலத்தில் அமையவேண்டும். நிகழ்காலத்தில் உள்ளது நிகழ்கால வாக்கியமாக இருக்க வேண்டும். இவ்வாறே எதிர்காலமும்.

ஆனால் மூன்று காலத்திலும் நிரந்தரமாக இருக்கக்கூடிய பொருளை எந்தக்காலத்தில் சொல்ல வேண்டும்? நிகழ்காலத்திலேயே சொல்லவேண்டும். "முக்காலத்தினும் ஒத்தியல் பொருளைச் செப்புவர் நிகழும் காலத்தானே"—மூன்று காலத்திலும் மாறாமல் நிரந்தரமாக இருக்கும் பொருளை நிகழ்காலத்தில் வைத்துச்சொல்லவேண்டும். இதற்கு உதாரணமாக, மலை இருக்கிறது, கடல் இருக்கிறது, வானம் இருக்கிறது, கடவுள் இருக்கிறார் எனச் சொல்லப்பட்டுள்ளது.

மலை, கடல், வானம் ஆகியவற்றுடன் கடவுளையும் சேர்த்துச் சொல்லப்பட்டுள்ளது கவனிக்கத்தக்கது.

இப்படி இலக்கண நூலில் உதாரணம் சொன்னதில் இருந்து என்ன தெரிகிறது? மலை, வானம், கடல், நிலம் ஆகியவற்றோடு கடவுளையும் சேர்த்துச் சொல்லியிருப்பதற்கும், வானாய், கடல் ஆனாய், நிலம் ஆனாய், மலை ஆனாய் என்று கடவுளைச் சுந்தரர் கூறுவதற்கும் இடையே உள்ள ஒற்றுமை தெரிகிறது அன்றோ!

உண்மையைச் சொன்னால் எல்லா இடத்திலும் ஒற்றுமை ஏற்படத்தானே செய்யும்!

கடவுள் வானமாக—ஆகாயமாக இருக்கிறார். வானம் என்பது பரவெளி, வெட்டவெளி. கடவுள் ஆகாயமாக வீற்றிருக்கும் தலம் சிதம்பரம். பஞ்ச பூததலங்களுள் சிதம்பரம் ஆகாச தலம்.

நிலமாக இறைவன் விளங்குகிறான். நிலம்—பிருதிவி. பிருதிவி தலம் திரு ஆரூர். மண்ணால் ஆன லிங்கம்—பிருதிவி லிங்கம்—மூலஸ்தானத்துக்குள் இருக்கிறது. காஞ்சி மாநகரையும் பிருதிவி தலமாகச் சொல்லுவார்கள்.

கடல்—திருப்பாற்கடலில் பள்ளிகொண்டவன் திருமால். கடற்கரை அருகிலேயே அமைந்த பல தலங்களைக் காணலாம். கடலில் நீராடுவதைப் புனிதமாகக் கூறுவதும் நினைக்கத் தக்கது. மலைமேலும், மலையடிவாரத்திலும் பல புண்ணிய தலங்கள் அமைந்துள்ளன.

திருக்கோயில் கட்டுமான அமைப்பு முறைகளையும், வழிபாட்டு முறைகளையும் விவரிக்கும் நூல் ஆகமம் எனப்படும். இதில் கோயில் கட்டுவதற்கு அதிகாரியாகக் குரு சொல்லப்படுகிறார். கோயில் கட்டத் துவங்குகிற நாளில் இருந்து, "தீட்சை" என்ற வாழ்க்கை நெறியை இவர் மேற்கொண்டொழுகுவார். இவர் கடவுளின் அம்சமாகச் சொல்லப்படுவதுடன், பஞ்சபூதங்களான பிருதிவி முதலியவற்றின் அம்சங்கள் எனக் கூறப்படும் அஷ்ட மூர்த்திகளைத் தம்முடன் சேர்த்துக்கொள்ளுவார் எனக் கூறப்படுகிறது.

வானம், கடல், மலை, நிலம் ஆகியவையாகக் கடவுள் விளங்குகிறார் எனச் சுந்தரர் சொன்னார். பஞ்ச பூதங்களின் அம்சமாக அஷ்ட மூர்த்திகள் விளங்குகின்றார்கள் என ஆகமம் சொல்லுகிறது.

பஞ்ச பூதங்களையும் கடவுளையும் இணைத்துச் சொல்லப்பட்ட கருத்து ஒற்றுமையை இந்த இரண்டிலும் காணலாம்.

---

# முக்திநிலை

உயிர்கள் கர்மத்தில்கட்டுண்டுகிடக்கின்றன. முக்குணங்களுக்கு வசப்பட்ட உயிர்கள் கர்மத்தினின்றும் விலகிக்கொள்ள முடியாதவைகளாக இருக்கின்றன. முக்குணங்கள் நம்மைக் கர்மத்தில் தளைத்து வைத்திருக்கின்றன. முக்குணங்களை வெல்லும்பொழுது நாம் கர்மத்திலிருந்து விடுபடுகின்றோம். முக்குணங்களுள் மிகக் கீழானது தமோகுணம்; மேலானது சத்துவகுணம். தமோகுணத்திலிருந்து சத்துவ குணத்திற்கு வந்து பிறகு அதையும் கடந்து அப்பால் செல்லும்பொழுது முக்திநிலை வாய்க்கிறது. முக்திநிலையில் நமக்குக் கர்மங்கள் இல்லை. பரமாத்ம சொரூபம் முக்திநிலையில் நமக்கு உரியதாகிறது. அருணோதயத்தின் போது தோன்றும் பிரகாசம் சூரியனுடைய வருகையைத் தெரிவிக்கிறது. அதுபோன்று ஈசுவரன் உள்ளத்தில் உதயமாவதற்கு முன்பு சுயநலம்கருதாத்தன்மை, பரிசுத்தம், பேரன்பு உள்ளத்தில் உண்டாகின்றன.

புளியம் பிஞ்சில் மேலோட்டையும் சதைப் பகுதியையும் பிரித்தெடுக்க முடியாது. அது முதிர்ந்து பழமாகும்பொழுது மேலோடு வேறாகவும், சதைப் பகுதி வேறாகவும் பிரிந்து விடுகிறது. அப்பொழுது சுலபமாகச் சதைப் பகுதியை மேலோட்டிலிருந்து பிரித்தெடுத்து விடலாம். முக்குணங்களைப் பற்றிக்கொண்டிருக்கும் பொழுது சரீரத்திலிருந்து ஆத்மாவைப் பிரித்தெடுக்கமுடிவதில்லை.முக்குணங்களைக் கடந்து போகின்றபொழுது சரீரத்திலிருந்து ஆத்மாவைப் பிரித்து எடுத்து விடலாம்.முக்குணங்களைக் கடந்த நிலையில் அல்லது முக்திநிலையில் ஆத்மா வேறு, சரீரம் வேறு என்கின்ற திட ஞானம் உண்டாகிறது. முக்திநிலையில் பரமாத்மாவோடு ஒன்றுபட்டு இருக்கின்றோம்.

முக்குணங்களில் இருப்பவனுக்கும், முக்குணங்களைக் கடந்து முக்தியிலிருப்பவனுக்கும் உள்ள வேற்றுமையை ஆராய்வோம். சத்துவ குணத்தில் கட்டுண்டிருப்பவன் அறிவையும், இன்பத்தையும் நாடுகின்றான். சாஸ்திர ஞானத்தை வளர்த்து அதில் பற்றுக்கொண்டிருக்கின்றான். சாஸ்திர ஞானப்பற்று எளிதில் அவனது உள்ளத்தை விட்டு அகல்வதில்லை. தன்னைக்காட்டிலும் ஞானத்திலோ, பக்தியிலோ, வேறு யாரும் இல்லை என்னும் அகங்காரம் சத்துவகுணம் படைத்தவன் உள்ளத்தில் இருக்கிறது.

ஸத் விஷயங்களைக் கேட்பதிலும், ஸத் விஷயத்தில் இன்பம் அடைவதிலும் சத்துவ குணம் வாய்க்கப் பெற்றவன் பேராவலுடன் இருக்கின்றான். சத்துவ குணத்தைக் கடந்து அப்பாற் சென்றவன் விருப்பு வெறுப்பின்றித் தன்னில் தான் திருப்தியுடையவனாக யாண்டும் பேரானந்தத்தில் இருக்கின்றான். ரஜோ குணம் உடையவன் வெறுமனே இருக்கமாட்டான். ஆசைக்கு வசப்பட்டவனாக ஏதாவது செய்து கொண்டேயிருப்பான். சில கர்மங்களில் அவன் பெரு விருப்பமுடையவனாக இருப்பான். வேறு சில கர்மங்களில் தாங்கவொண்ணாத வெறுப்புக் கொண்டிருப்பான். தனக்கு எது நல்ல கர்மம் என்று தோன்றுகிறதோ அதைப் பெரு விருப்பத்தோடு செய்கிறான். தனக்கு எது கெட்ட கர்மம் என்று தோன்றுகிறதோ அதைச் சினந்து வெறுக்கின்றான். குணத்தைக் கடந்தவன் மறந்தும் கேடுடைய கர்மம் செய்யமாட்டான். எந்தத் தொழிலாக இருந்தாலும் பற்றற்று அதைத் தெய்வாராதனையாகச் செய்கின்றான். ஒரு கர்மமுமில்லாத இடத்தில் சாந்தமாக அமைதியுற்று இருக்கின்றான். தமோகுணப் பற்றுடையவன் சோம்பலிலும் தூக்கத்திலும் விருப்பங்கொண்டிருக்கின்றான். அவைகளுக்குப் பங்கம் வரும்பொழுது வெறுப்படைகின்றான். குணாதீதத்தில் இருப்பவன் விழிப்பு, உறக்கம் ஆகிய இரண்டு நிலைகளிலும் ஒரேமாதிரியாக இருக்கின்றான். தூய கண்ணாடி தன்முன் தோன்றுவதை அப்படியே விளக்கிக் காட்டுகிறது. அக்கண்ணாடியில் ஒன்றும் தோன்றாதிருக்கும்பொழுது அது தன்மயமாய் இருக்கிறது. அங்ஙனம் குணாதீதத்துக்குச்சென்றவன் முக்குணங்கள் தோன்றுமிடத்தும், தோன்றாவிடத்தும், மனம் பாதிக்கப்படாதவனாக இருக்கின்றான். முக்குணங்களின் செயல்களுக்கிடையில் அவன் யாண்டும் நிஷ்டையில் இருக்கின்றான். முக்திநிலையில் இருப்பவர்களைப்பற்றி ஸ்ரீ ராமகிருஷ்

ணர் பகர்ந்திருப்பதாவது: "ஜீவன் முக்தர்கள் உலகில் எங்ஙனம் வாழ்ந்து வருகிறார்கள் தெரியுமா? மீன்கொத்திப் பறவைகள்போன்று அவர்கள் உலகில் வாழ்ந்து வருகிறார்கள். மீன்கொத்திப் பறவை நீரில்ஆழத்தில் மூழ்குகிறது. ஆனால் அதன் சிறகுகள் நனைவதில்லை. இரண்டொரு துளிநீர் அதன்மீது ஒட்டிக்கொண்டிருக்குமானால் அப்பறவை தன் சரீரத்தை அசைத்துச் சுலபமாகஅதனை நீக்கிவிடுகிறது."

உடற்பற்றும், உலகப்பற்றும் முக்குணங்களின் வசப்பட்டிருப்பவர்களுடைய உள்ளத்தில் இடம் பெற்றிருக்கின்றன. உடலைத் தங்களுடையதென்றும், உலகப்பொருள்களைத் தங்களுடையவென்றும் எண்ணி இன்பதுன்பத்திற்கும், இகழ்ச்சிக்கும் புகழ்ச்சிக்கும் வசப்பட்டவர்களாக இருக்கிறார்கள். தமோகுணத்தில் மூழ்கியிருப்பவன் தன்னை உடல் என்றே கருதி ஜடநிலையில் இருக்கின்றான். அவன் அறியாமை என்னும் துன்பத்தில் அழுந்திக் கிடக்கின்றான். பன்றியானது சேற்றில் புரண்டு இன்பமடைகிறது. அங்ஙனம் தமோகுணம் ஓங்கப்பெற்றவன் கீழ்மையில் உழன்று துன்பமடைகிறான். பன்றி சேற்றை விட்டு வர விரும்பாததுபோன்று தமோகுணம் ஓங்கப்பெற்றவன் கீழ்மையை உதறித்தள்ளுவதற்கு விரும்புவதில்லை. உடலுக்கு நோய் வருகிறது. உடல் ஆரோக்கியமாக இருக்கிறது. உடல் ஆரோக்கியமாகஇருப்பதைமுன்னிட்டுத் தான்சுகத்தில் இருப்பதாகவும், உடல்நோய்வாய்ப்பட்டிருப்பதைமுன்னிட்டுத் தான் நோய்வாய்ப்பட்டிருப்பதாகவும் எண்ணிக்கொள்கின்றான் ரஜோகுணம்படைத்தமனிதன். உலகப்பொருள்களைத் தன்னுடையவாக எண்ணிகொண்டு அவை தன்னிடத்துவரும்பொழுது இன்பமும், தன்னை விட்டு நீங்கும்பொழுது துன்பமும் அடைகின்றான். உலகத்தவர்களுடைய புகழ்ச்சிக்கும், இகழ்ச்சிக்கும் ரஜோகுணம் படைத்த மனிதன் பெருமதிப்புக்கொடுக்கின்றான். உலகப் புகழைத் தேடவேண்டும் என்பதில் விருப்பமும், உலக இகழ்ச்சியில் வெறுப்பும் உடையவனாக ரஜோகுண மனிதன் இருக்கின்றான். குணாதீதத்துக்குச் சென்றவன் இன்பதுன்பத்தையும், புகழ்ச்சி இகழ்ச்சியையும் சமமாகக் கருதி ஆத்ம சொருபத்தை முற்றும் உணர்ந்தவனாக ஆத்ம திருப்தனாக இருக்கின்றான்.

குணத்துக்கு வசப்பட்டவனுக்கு மானம் அவமானம், நட்பு, பகை, முதலியன உண்டு. அவன் கர்மத்தைத் தனக்கெனச் செய்கின்றான். கர்மத்தைத் தனக்கெனச் செய்யும்பொழுது அதில் வருகிறஇன்பதுன்பத்திற்கு உள்ளாகின்றான். முக்தி நிலையில் இருப்பவன் தனக்கென எந்தக் கர்மமும் செய்வதில்லை.முக்தன் ஒருவன் கர்மம் செய்வானாகில் அது உலக நன்மையை முன்னிட்டுத் தெய்வ சங்கல்பத்திற்கு உட்பட்டதாக அமையும். அவன் செய்கிற கர்மத்தின் விளைவாக வருகின்ற இன்பதுன்பத்திற்கு அவன் ஆளாவதில்லை. தமோகுணம் படைத்தவனுக்குக் குண்டலினி சக்தி மூலாதாரத்தில் தூங்கிக்கொண்டிருக்கிறது. அதை எழுப்புவதற்கு அவன் கர்மம் செய்தாகவேண்டும்.

பக்தி மார்க்கத்தில் செல்பவன் கடவுளைக் குறித்துப் பாடுகின்றான்; கடவுளைக் குறித்துப் பஜனை செய்கின்றான். அப்பொழுது அவனிடத்தில் ஓரளவு பாரமார்த்திக உணர்வு தலையெடுக்கிறது. ரஜோகுணம் படைத்தவனிடத்தில் பாரமார்த்திக உணர்வு தலையெடுக்கும்பொழுது அதை விளம்பரம் செய்து மகிழ்ச்சி அடைகின்றான். சத்துவகுணம் ஓங்கப்பெற்றவன் பக்தியிலும் ஞானத்திலும் தனக்கு நிகர் யாரும் இல்லை என்கின்ற சிறிது அகங்காரமுடையவனாக இருக்கின்றான். ஒளியைக் கண்டதும் இருள் மறைவதுபோன்று இக்குறைபாடுகளெல்லாம் குணாதீதத்தில் மனதிலிருந்து மறைகின்றன.

முக்குணங்களைக் கடந்து செல்லுதற்கு நான்கு யோகங்களும் உதவுகின்றன. கர்மத்தைச் சுயநலமற்று உலக நன்மைக்காகவும், தெய்வத்தின் பொருட்டும் செய்யப்படும்பொழுது அது குணாதீதத்துக்குப்போக உதவுகிறது. கர்மபலனில் பற்றுவைக்காது கர்மத்தைச் செய்கின்ற அளவு சித்தசுத்தி உண்டாகிறது. மனம் தூய்மை அடைய அடைய கர்மாதீதத்துக்குச்செல்கின்றது.சோம்பலைப்போக்குவதற்குக் கர்மம் புரிவது அவசியம். பற்றற்றுக் கர்மம் புரிவதன்மூலம் ரஜோகுணத்தைவென்றவர்களாகின்றோம். கர்மம் புரிவதற்கிடையில் கர்மம் புரிகிறேன் என்ற உணர்வை வெல்லுவது சத்துவகுணத்தை வெல்லுவதாகிறது.

பக்திமார்க்கமும் முக்தியின்கண் நம்மைக் கொண்டு சேர்க்கிறது. பக்தன் உணர்ச்சியைத் திருத்தியமைக்கின்ருன். தெய்வம் பேரறிவு சொருபமாக இருக்கிறது. அறிவு மயமான தெய்வத்தின்மீது மனம் ஈடுபாடு உடையதாகும் அளவு அறிவு சம்பந்தமான, உணர்ச்சி மனதில் எழுகிறது. அறிவுணர்ச்சி உடல் உணர்ச்சியை வெல்லுகின்றபொழுது தமோகுணம் வெல்லப்படுவதாகிறது. தெய்வீக உணர்வில் மனம் எவ்வளவுக்கெவ்வளவு ஈடுபடுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு சிற்றுணர்வு ஒடுங்குகிறது. மனம் அறிவில் ஒடுங்குகிற பொழுது அது முற்றிலும் கரைந்து போகிறது. மனம் கரைந்து போனல் எஞ்சியிருப்பது முக்தி நிலையாகிறது. சிற்றுணர்வு வசப்பட்டுள்ள மனதைப் பேருணர்வில் கரைத்து விடுவது பக்தியோகத்தின் பயனுகும்.

இனி ஞானயோகமும் நம்மை முக்திநிலைக்கு எடுத்துச் செல்லுகிறது. ஞானயோகம் நித்திய அநித்தியவஸ்து விசாரம் செய்து நித்தியத்தில் மனதைச் செலுத்துவதாகும். அநித்தியமாய் உள்ள உலகப்பற்றுக் குறையும்பொழுது மனம் தூய்மையடைகின்றது. மனத்தூய்மை உயர்ந்த கருத்துக்களைக் கிரகிப்பதற்குப் பயன்படுகிறது. அறிவைத் தீட்டுதல் என்பது மனதைத் தூய்மைப்படுத்துவதாகும். அறிவைப் பற்றிய சிந்தனை அறிவை வளர்க்கிறது. கூட்டுப்புழு குளவியைப் பற்றியே எண்ணி குளவிமயமாவது போன்று மனம் அறிவைப் பற்றியே சிந்திக்கும் பொழுது அது அறிவு மயமாகின்றது. ஞானமார்க்கம் அறிவைப் பேரறிவாக மாற்றுகிறது. நம்முடைய அறிவைத் தூண்டி வருகின்ற பொருள் எதுவோ அதைப்பற்றிய சிந்தனையை வளர்ப்பதும், அதை வழிபடுவதும் ஞானமார்க்கமாகும்.

முக்குணங்கள் எத்தகையவை என்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் விளக்கியுள்ளார். "ஒரு மனிதன் காட்டுவழியே போய்க்கொண்டு இருந்தான். அவனை மூன்று திருடர்கள் மடக்கிப் பிடித்துக்கொண்டார்கள். அவனிடமிருந்த பொருள்களை யெல்லாம் அத்திருடர்கள் பறித்துக்கொண்டனர். அவர்களில் ஒருவன் இவனை 'உயிருடன் வைத்திருப்பதில் லாபமென்ன? இவனை இங்கேயே ஒழித்து விடலாம்' என்று கூறித் தன் கத்தியால் அவனை வெட்டப் போனன். மற்ருருவன் அவனைத் தடுத்து, 'அவனைக்கொல்லுவதால் நமக்கென்ன லாபம்? அவனுடைய கை கால்களைக் கட்டி இங்கேயே போட்டுவிட்டுப் போய்விடலாம்' என்ருன். அப்படியே அவன் கை கால்களைக் கட்டி அங்கேயே போட்டு விட்டுச் சென்றனர். அவர்களில் மூன்ருமவன் கொஞ்சதூரம் சென்றதும் திரும்பி வந்தான். கட்டுண்டு கிடப்பவனின் நிலையைப் பார்த்து இரக்கப் பட்டான். 'அன்பா! உனக்கு வலிக்கின்றதா, நான் உன் கட்டுகளை அவிழ்த்து உன்னை விடுதலை செய்கிறேன்' என்று கட்டுகளை அவிழ்த்து விட்டான். அவன் ஊருக்குச் செல்வதற்கு வழியைக் காட்டுவதாகக்கூறி அவனைத் தன்னுடன் அழைத்துச் சென்ருன். காட்டைக் கடக்கின்ற வரையிலும் வழிப்போக்கனுடன் சென்று அவன் ஊர் கண்ணுக்குத் தென்பட்டதும் ஊருக்குச் செல்லும் வழியைக் காட்டிப் பத்திரமாகப் போகும்படி கூறினன். வழிப்போக்கன் அத்திருடனைப் பார்த்து 'நீ எனக்குப் பெரிய உதவி செய்துள்ளாய். நீயும் என்னுடன் வீட்டுக்கு வா' என்று நன்றியறிதலுடன் அழைத்தான். அதற்கு அந்தத் திருடன் 'நான் ஊருக்குள் வரக்கூடாது. வந்தால் போலீசார் என்னைக் கைது செய்து விடுவார்கள்' என்று கூறிப் போய்விட்டான்.

"உலகம்தான் காடு. சத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களும் மூன்று திருடர்கள். ஜீவன் காட்டுவழியே சென்ற வழிப்போக்கன். ஞானம் அவனிடமிருந்த பொருள். தமோ குணமும், ரஜோ குணமும் உலக பந்த பாசம் என்னும் சங்கிலியால் கட்டுகின்றன. சத்துவ குணம் உலக பந்தத்தினின்றும் விடுவித்து ஜீவனைக் காப்பாற்றுகிறது. ஆனல் சத்துவ குணம் பரத்தினிடம் வராது. பரத்தை நோக்கிச் செல்லும் வழியை அது காட்டித் தருவதோடு அதன் வேலை முடிந்து விடுகிறது. பரமபதம் குணங்களுக்கு அப்பாற்பட்டது."

மூன்று குணங்களையும் வென்று குணதீதத்துக்குப் போவது முக்தி நிலையாகும். முக்தி நிலை அடையும் வரையில் வாழ்க்கை என்னும் பயணம் இருக்கும். முக்தி நிலை அடைந்ததும் வாழ்க்கை பூர்த்தியாகிறது.

# தந்தை தாய்ப் பேண்

(சுவாமி துருவானந்தர்)

“தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லே. தந்தை சொல் மிக்க மந்திரமில்லே. ஆன்ருேர் கள் அருளிய அமுத மொழிகள், சாகா வரம் பெற்ற சத்திய வாக்குகள் இவை. இந்த வாக்குகள் மக்கள்மாட்டுப் பின்னிப் பிணைந்து இருந்தன முன்பு. ஏட்டில் மட்டும் இருந்து எங்கேயோ ஓடி ஒளிந்து இருக்கிறது இன்று. பெற்ருேரை தெய்வமாகப் போற்றிப் புகழ்ந்து பெருமையுற்றது பண்டைய பாரதம். அவர் களைத் தூற்றி, துரத்தி அவர்களுக்குச் சொல் லொணுத்தொல்லே கொடுத்து சிறுமையுற் றுள்ளது இன்றைய இந்தியா. இதன் பயன் நாடு வீழ்ச்சியை நோக்கிப் போகிறது என்பது தானே.

சந்தைக்கு நல்ல பழவகைகள் வரவில்லே என்ருல் என்ன பொருள்? மரத்தில் உற்பத்தி இல்லே என்றுதானே பொருள். நாட்டில் நல்லவர்களும், அறிஞர்களும், மேதைகளும் இல்லேயே என்ற அவலநிலே ஏற்படக்காரணம் என்ன? பண்பட்ட குடும்பஸ்தர் நாட்டில் இல் லாத குறையால்தானே நல்லவர்களே நாட்டுக்கு அளிக்க முடியவில்லே. நல்லவர்கள் இல்லாத குறையால்தானே நல்ல திட்டங்களும் உருவாக முடியாது நாடு தூங்கிப்போய்க்கிடக்கிறது.

தான் எண்ணிய வண்ணமே கல்லிலிருந்து விரும்பிய வடிவத்தை உருவாக்குகிருன் சிற்பி. எத்தகைய குழந்தை தமக்கு வேண்டும் என்று தாய்தந்தையர் விரும்பி அதன்பொருட் டுத் தவ வாழ்வு வாழுகின்றனரோ அவர் விரும் பும் குழந்தைகள் நிச்சயம் நாட்டுக்கு ஒளி காட்ட வந்து உதிக்கும்.

“எந்தப் புத்திரனே, புத்திரியோ தாய், தந்தை, மாமன், மாமியைத்தெய்வமாகவணங்கி அவர்களுக்கு அன்புடன் சேவை செய்கின்ற னரோ அந்தவீட்டில் சான்ருேர்பிறக்கின்றனர். அவர்களேப் பிடித்த பீடைகளும், தரித்திரங் களும் மின்னல்போல விலகும்”. இது மனு நமக்குப் புகட்டும் பாடம். மேலே சொன்ன கருத்துக்களே ஒரு புத்தகத்திலிருந்து எடுத்து வாசித்தார் பரமசிவம்.

“ஆஹா! என்ன அற்புதமான கருத்துக்கள்! தம்பி வேலாயுதம் இந்த புத்தகத்தைச் சிறிது படித்துப்பார். தாய் தந்தையர் எப்படி இருக்க வேண்டும், பிள்ளேகள் பெற்ருேரிடத்தில் எப் படி நடந்துகொள்ள வேண்டும்” என்று அற் புதமாக இந்த நூலில் விளக்கப்பட்டுள்ளது. எனக்குச் சிறிது வேலே இருப்பதால் வெளியே போய்விட்டு வருகிறேன் என்று சொல்லிவிட் டுச் சென்ருர் பெரியவர் பரமசிவம். அப் பொழுதுதான் உள்ளே வந்தான் வேலாயுதத் தின் கல்லூரித் தோழன் கந்தன். வெகு நாட் கள் கழித்துச் சந்திக்கிற நண்பனேக்கண்டதில் வேலாயுதத்திற்கு அளவற்ற மகிழ்ச்சி உண்டா யிற்று.

“நண்பா! உன் வீட்டிலிருந்து வெளியே போகிருரே அவர் யார்? அவரை நான் இதற்கு முன்பு பார்த்தது இல்லேயே” என்ருன்கந்தன்.

‘என் தந்தை இறந்த பிறகு இவர்தாம் என் தந்தை போன்று என்னேக் கவனித்து வருகி ருர்’ என்ருன் வேலாயுதம். ‘என்ன உன் தந்தை இறந்து போய்விட்டாரா? எப்படி இறந்தார்?’ என அதிர்ச்சியால் தாக்குண்டவன் போன்று கந்தன் கேட்டான். வேலாயுதம் பெரியவரின் சரிதத்தை விளக்கினன்.

இதோ போகிருரே இவர் பெயர் தான் பரம சிவம் “ இவர் மதுரையம்பதியில் வாழ்ந்தவர். பொறுப்பான உத்தியோகம் ஒன்றை வகித்து வந்தார். தாய் தந்தையர் இவரைப் படிக்க வைக்காவிட்டாலும் சிறிய தந்தையின் ஆதர வில் கஷ்டப்பட்டு உழைத்துப் படித்து முன் னுக்கு வந்தவர். நிறைய சம்பாதித்தார். ஆனல்பெற்றெடுத்த தாய் தந்தையரைக் கவனி யாது அவர்களேப் புறக்கணித்தார். வறுமைத் துன்பத்தில் உழன்ற பெற்ருேர் வெந்து வேத னேப்பட்டு இம் மண்ணுலகைவிட்டுப் பிரிந்த னர். தனிமையில் இருந்த பரமசிவம் விவாகம் பண்ணுவதைப்பற்றி அவருடைய சிறிய தந் தையை அணுகினர். அனுபவத்தில்பழுத்த அம் முதியவர் பகர்ந்தார். “ தம்பி விவேகம் உள்ள வனுக்கு விவாகம் பெரிய இடைஞ்சல். முற் காலத்தில் புத்திரப் பேற்றிற்காகவேண்டி மணம் புரிந்தனர். அவர்கள் முற்றிலும் கட்

டுப்பாடான வாழ்க்கையை மேற்கொண்டனர். ஆனால் இன்றோ காமத்திற்கு அடிமைப்பட்டு மணம் புரிய விழைகின்றனர். அதன் விளைவு என்ன? புற்றீசல்கள்போல பண்பற்ற ஜீவர்களை உண்டுபண்ணி உலகுக்கு அளிக்கின்றனர். தாங்களும் சீக்கிரம் நோய்வாய்ப் படுவதுடன் தங்களின் சந்ததிகளையும் அல்லவோ அழித்துத் தள்ளுகின்றனர். அவர்கள் தங்கள் நாட்டுக்கு அளிக்கும் கைம்மாறு இது தானு? அவர்களால் நாடு அடையும் பயன் தான் என்ன? இவைகளை எல்லாம் சிந்தித்துப் பார். மணம்புரிந்து வேதனைப்பட்டு வாழ்வதைவிட மணம்புரியாது நன்னெறியில்சென்று உனக்கும், உலகுக்கும் நலம் தேடலாம். ஆகவே சிந்தித்துச் செயல்படு' என்று பொறுப்பை பரமசிவத்தின்மீது ஒப்படைத்தார்.

வாழவேண்டியவன் ஒருவன் இருக்க உற்றாரும் பெற்றாரும் மிகுந்த அக்கறை எடுத்து ஒருவனுக்கு மணம் புரிவதில் அதிக கவனம் செலுத்துகின்றனர். நிம்மதியாகக் காலம் தள்ளிவந்த பரமசிவத்தை இல்வாழ்வில் ஈடுபடும்படி தூண்டி வந்தனர் உற்றாரும் நண்பர்களும். திண்ணிய உள்ளம் படைத்தவன் தனக்கு எது நல்லது என்று தெரிகிறதோ அதை அணுவளவும் விட்டுவிடமாட்டான். அதன்பொருட்டு எத்தகைய துன்பங்களையும் ஏற்கத் தயாராக இருப்பான். பரமசிவம் அப்படிப்பட்டவரல்லர். விவாகத்தால் வருகிற வீழ்ச்சியை அறிந்திருந்தாலும் குழம்பியிருந்த அவருடைய மனது மணம்புரிவதாக முடிவெடுத்தது. அவரது அந்தஸ்திற்கேற்ற இடத்தில் விவாகம் நடந்தது. சிறிது காலம் இல்லறவாழ்வு நடைபெற்றது.

இன்பத்திலும், துன்பத்திலும் ஒரே துணையாக இருந்து கணவனைக் காக்கும் கற்புத் தெய்வத்துக்குத்தான் 'துணைவி' என்றமங்கலச் சொல்லை நமது முன்னோர்கள் வழங்கினர்கள். வீட்டுக்குத் தலைவியாக வந்த அம்மையார் கலைகள்பலகற்றவர். பல்வேறுவிஷயங்களைப் புள்ளி விவரங்களோடு அறிந்திருந்தவர். ஆனால் மனையில் மணாளனோடு எப்படி வாழவேண்டும் என்ற மனையியல் தெரியாத பேதையாக இருந்தாள். வரவுக்கு மீறிய செலவு வைத்து வாழ்ந்தவள் எப்போதும் கற்பனை உலகில் பறந்த அவ்வனிதையின் மனதைப் புரிந்துகொள்ள பரமசிவத்தால் இயலவில்லை. ஒருவருக்கொருவர் சரியாகப் புரிந்துகொள்ளாததால் தானே வெறுப்பும், பொறாமையும், பூசலும் வளருகின்றன. இவர்கள் என்ன அதற்கு விதிவிலக்கா? ஆடம்பர வாழ்வில் ஊறிவளர்ந்த அம்மையாரின் மனதைத் திருத்தி யமைக்கும் நோக்கம் பரமசிவத்துக்கு இல்லை. ஏன்? எல்லாம் காலப்போக்கில் மாறிவிடும் என்று கண்டும் காணாது இருந்தார். இதற்கு அடிப்படைக் காரணம் காமமே. தேவைகள் பெருகின. போதிய வரவின்மையால் லஞ்சம் வாங்கிக் காலம் கழித்தார் பரமசிவம். நேர்மையாக இருந்தபோது இருந்த செல்வாக்கு நாளுக்கு நாள் மங்குவதையும், அதிகாரிகள் கண்டித்ததையும் அறிந்த பரமசிவம் தம்மைத் திருத்திக் கொள்ள முயன்றார். மேலும் தொடர்ந்து தவறு செய்ய விரும்பாத பரமசிவம் வீண்செலவைக் குறைக்க வீட்டுத் தலைவிக்கு அறிவுரை வழங்கினர். பிறர் தன்னை மதிக்கவேண்டும் என்ற போலி கௌரவப் பேய்க்கு வசப்பட்ட அம்மாதின் காதுகளில் இவருடைய உபதேசங்கள் எதுவும் ஏறவில்லை. பூசல் வளர்ந்தது. உறவு முறிந்தது. கர்ப்பிணியான மனைவியை அவள் தாய் வீட்டுக்கு அனுப்பி விட்டார்.

ஒருவர் பொறை இருவர் நட்பு என்பது பெரியோர் சொல்லிச் சென்ற வாசகம். இல்லற மட்டுமன்று எந்த தர்மத்தைக் கடைப்பிடிப்பவனும் பிறரோடு அனுசரித்து, ஒத்துப் போகுமளவுதான் அவன்நலனை எதிர்பார்க்கமுடியும். பொறுமையையும் விட்டுக் கொடுக்கும் தன்மையையும் ஒவ்வொருவரும் கொஞ்சம் கொஞ்சமாக வளர்த்துக் கொள்ளவேண்டும். மாணவன் ஆசிரியரோடு ஒத்துப்போக வேண்டும். வேலைக்காரன் எஜமானனுடன் அனுசரித்துப் போகவேண்டும். மனைவி கணவன் அடிச்சுவட்டைப் பின்பற்றி அணுவளவும் பிசகாது அவன் நிழல் போன்று இருக்கவேண்டும்.

பிறர் மனம் அறிந்து நடந்து கொள்ளத் தெரியாத தங்கையின் மனம் அறிந்தான் அவளது தமையன். அவன் ஒரு திரைப்பட இயக்குநன். தங்கையின் மனம் அமைதியுற தான் தயாரிக்கும் படங்களுக்கு எந்தக் காட்சியைப் போடலாம், எதை நீக்கலாம் என

ஆலோசனை கூறும்படி சொன்னான். பரமசிவம் பதவியிலிருந்து ஓய்வு பெற வேண்டிய காலமும் வந்தது. வரவும் குறைந்தது. இந்த நிலையில் அவருக்குத் துணையாக இருந்தவர் என் தந்தை முனுசாமி. அவர் வீட்டில் வேலை செய்துகொண்டு வேலைக்காரனாக இருந்தாலும் பரமசிவத்தின் துயரைப் போக்குவதில் சிறந்த துணைவனாக இருந்தார். தனிமைத் துன்பத்தை மறக்கச்செய்ய அவரை எங்கள் வீட்டில் தங்கியிருக்கச் செய்து அவரைப்பராமரித்து வந்தார்.

திரைப் படங்களைப் பார்ப்பதும், அவற்றிலுள்ள குறைகளைத் தமையனுக்கு எடுத்துச் சொல்லுவதும், கொலை, கொள்ளை போன்ற காட்சிகளை எப்படி அமைத்தால் படம் நன்கு அமையும் என்ற ஆழ்ந்த சிந்தனையிலும், செயலிலும் பெரும்பகுதியைக் கழித்து வந்தாள் அம்மாது. இவள் திரிகரணங்களாலும் புரிந்த தீவினைகள் இவளுடைய கருவில் பதிந்தன. குழந்தை பிறந்தது. உயர்ந்த மனிதனாக உருவாகி உள்ளம் மகிழ்வடையச்செய்வான்என்று குடும்பத்தார் நினைத்தனர். அந்தோ! அவன் வளர்ந்து வாலிபனானான். கொலை, கொள்ளை போன்ற கொடிய செயல்களை மகிழ்வோடு செய்து வந்தான். வீட்டிலும், அக்கம்பக்கத்து ஊரில் நடக்கும் கொலை, கொள்ளைகள் யாவும் இவனால் நடக்கப் பெற்றவைகளாகவே இருந்தன. அவ்வளவு சாமர்த்தியமாக இருந்ததால் அவன் தான் இத்தகைய காரியங்களைப் புரிகிறான் என்று யாரும் சந்தேகப்பட முடியாமல் இருந்து வந்தன.

பரமசிவம் க்ஷேத்ர யாத்திரை செய்ய விரும்பினார். அவர் வைத்திருந்த பணத்தை எடுத்துக்கொண்டு என் தந்தையைத் துணைக்கு அழைத்துச் சென்றார். புகை வண்டியில் நள்ளிரவில் பரமசிவம் திருடன் ஒருவனால் குத்தப்பட்டார். திருடன் பணத்தை எடுத்துக் கொண்டு ஓடினான். மக்களால் பிடிபட்டான். உயிருக்கு ஊசலாடிய பரமசிவத்திற்கு என் தந்தையின் இரத்தம் நிறைய வழங்கப்பட்டது. கொலை செய்ய முயற்சி செய்தவன் பரமசிவத்தின் மகன்தான் எனத் தந்தி மூலம் அறிவித்தார்கள். தன் மகனே தன் கணவனைக் கொலை செய்ய முயன்றதை எண்ணிய தாய் மனவேதனையடைந்தாள். கணவனை நாடி வந்து காலில் வீழ்ந்து மன்னிப்புக்கோரினாள். குத்தப்பட்ட பரமசிவம் உயிர்பெற்றார். கொலை செய்ய முயன்ற மகனைப் பல்வேறு குற்றங்களுக்காக மரணதண்டனை விதித்துத் தீர்ப்பளித்தது நீதி மன்றம். இரத்தத்தை எல்லாம் தானமளித்த என் தந்தை உடல் நலம் குன்றினார். பிரிந்து போன குடும்பத்திற்கு மறுவாழ்வு அளித்த என் தந்தை எங்களையெல்லாம் பிரிந்து சென்று விட்டார்.'

என் தந்தையின் நிலையும், இவர் குடும்பம் அடைந்த நிலையையும் பார்த்தாயா கந்தா? வாழ்க்கை என்பது இதுதான்."

கந்தன்: "ஒரு குடும்பத்தில் இப்படியும் நிகழுமா என எண்ணத் தோன்றுகிறது. இந்தப் பெரியவர் குடும்பம் இந்த நிலைக்கு வரக் காரணம் என்ன?

வேலாயுதம்: "பெற்றோர்கள்தாம் காரணம். பெரியவர்கள் நெறியாக வாழ்ந்து தங்களுடைய பிள்ளைகளைக் கட்டுப்பாடுடன் வளர்த்திருந்தால் இவ்வளவு துன்பங்களும், குற்றங்களும் நடந்திருக்குமா? ஊரே சிரிக்கிற அளவுக்கு இவர்கள் கதை பரவியிருக்குமா?

கந்தன்: "பெற்றோர்கள் எப்படி வாழவேண்டும் என்று முதலில் சொல்"

வேலாயுதம்: 'ஆவதும் பெண்ணாலே-உலகம் அழிவதும் பெண்ணாலே' என்று ஒருபழமொழி இருப்பதை நீ அறிவாயல்லவா? கர்ப்பந்தரித்திருக்கும் தாய் ஒருத்தி எத்தகைய எண்ணங்களைக் கொண்டுள்ளாளோ அதற்கேற்ற குழந்தைதான் பிறக்கும். வால்மீகி ஆஸ்ரமத்தில் தெய்வீக சிந்தனையில் ஊறி இருந்தாள் சீதாதேவி. அதன் விளைவாகப் பிறந்தவர்கள் யார் தெரியுமா? ஸ்ரீ ராமனுக்கு நிகரான பலம் படைத்த லவனும் குசனும் ஆவார்கள். பரமசிவத்தின் மனைவி கர்ப்பமாயிருந்த பொழுது சினிமாக்காட்சியில் வருகிற கொலை, கொள்ளை, முதலியவற்றைப் பற்றியே சிந்தித்து, பேசி, செயல்பட்டு வந்தாள். அதனால் அவள் புத்திரன் கொலைகாரனாக மாறித் தூக்கிலிடப்பட்டான்.

அதுமட்டுமன்று. குழந்தைகள் எப்படி வளர வேண்டும் என்று எண்ணுகின்றார்களோ அப்படிப் பெற்றோர்கள் தங்களைத் திருத்தியமைப்பது கிடையாது. பொய் சொன்ன வாய்க்குப் போஜனம் கிடையாது. உண்மையே

பேசவேண்டும் என்று குழந்தைகளுக்கு அறிவுரை புகட்டுவார்கள். இவரைத் தேடிக் கடன்காரன் வருவதாகத் தெரிந்தால் தன் குழந்தையிடம் 'எங்க அப்பா நேற்றே ஊருக்குப்போய் விட்டார் என்று சொல்லி விடு' என்று வீட்டுக்கு உள்ளே போய் படுத்துக்கொள்கிற தாய் தந்தையரும் உண்டு. ஆனால் வஞ்சகம் அறியாத குழந்தை 'எங்க அப்பா நேற்றே ஊருக்குப் போனதாகச் சொல்லச் சொன்னார்' என்று வந்தவரிடம் உண்மையைப் பகரும். இன்னும் கொஞ்சம் அறிவு வந்தவுடன் சூழ்நிலைக்குத் தகுந்தாற்போல் பொய்பேசக் கற்றுக் கொள்ளவேண்டும் என்று அறிந்து கொள்கிறது. இந்தக் குழந்தைக்குப் பொய் பேச மறைமுகமாக உதவி செய்தது பெற்றோர்களல்லவா?

கந்தன்: இப்போதுள்ள பெற்றோர் நிலை என்ன? இவர்கள் நல்லவர்களாக மாறியமைய வழி என்ன?

வேலாயுதம்: பிள்ளைகளை அருகில் வைத்துக் கொண்டேபீடி, சிகரட், வெற்றிலை பாக்குகள், சாராயம் போன்றவைகளைஉபயோகப்படுத்துகிற பாதகர்களும் இருக்கத்தானே செய்கிறார்கள். அவர்களைப் பார்த்து குழந்தை, தானும் அவர்கள்போன்று செய்ய முயலுகிறது. குழந்தைகள் செய்தால் குற்றம் என்று கூறித் தண்டனை விதிக்கின்றனர் பெற்றோர். 'குழந்தைகள் நலனுக்காக வேண்டியும், தங்கள் உடல் நலனுக்காக வேண்டியும் கள், சாராயம், பீடி, சிகரட், சுருட்டு, புகையிலை, வெற்றிலைபாக்கு முதலியவற்றை இனித்தொடமாட்டேன்'என்று ஒவ்வொரு பெற்றோரும் தங்கள் இஷ்ட தெய்வத்தின் முன் கற்பூரம் கொளுத்தி சத்தியம் செய்து உறுதி எடுத்துக்கொள்ளவேண்டும்.

குழந்தைகள் முன்னிலையில் பொருந்தாத தீயவார்த்தைகளைப் பேசுவதும்கூடாது. தங்கள் குழந்தைகள் வாய்தவறிப்பேசுவதைக் கண்டிக்கிறவர்கள் தாங்களே நல்லவார்த்தைகளைப் பேசிப் பழகவேண்டும்.

விவேகானந்த சுவாமிகளிடம் ராமகிருஷ்ணர் கேள்வி ஒன்று கேட்டார். 'உன் கையில் பழம் ஒன்று கிடைத்தால் என்ன செய்வாய்?'

விவேகானந்தர் சொன்னார்: பக்கத்திலுள்ளவர்களுக்குப் பகிர்ந்துகொடுத்து நானும் உண்பேன்!'' இந்தப் பழக்கம் அவருடைய தாய் புவனேசுவரி தேவி புகட்டியது.

பரமஹம்சர் கேட்ட கேள்வியை இப்பொழுது உள்ள சிறுபிள்ளைகளிடம் கேட்டால் என்ன பதில் கூறுவார்கள் தெரியுமா?

'பக்கத்திலுள்ளவர்களைப் பார்க்க வைத்து நான் உண்பேன்' என்பார்கள். இந்தச் சுயநலத்தை வளர்க்கும் பழக்கம் எங்கிருந்து தோன்றியது? தாய் தந்தையர் அல்லாது வேறு யார் ஊட்ட முடியும்!

தங்களை மாற்றியமைத்துவிட்டால் பெற்றோர் பிள்ளைகளைத் திருத்தவேண்டியதில்லை. அவர்களே நல்ல பிள்ளைகளாக வளருவார்கள். பத்துமாதம் சுமந்து வளர்த்த பெண் தெய்வத்தை வணங்காவிட்டாலும், அடிக்காது, திட்டாது இருப்பவர் எத்தனை பேர்? பெற்றோர் உயிரோடு இருக்கும்போது உணவிடாது சித்திரவதை செய்தவர்கள், பெற்றோர் இறந்த பிறகு அன்னதானம் இடுவது, இறந்த சவத்துக்கு மேளதாளம் கொட்டி அமர்க்களப் படுத்துவது போன்ற செயலில் ஈடுபடுவது எவ்வளவு அறிவீனம்.

பெற்றோருக்குப் பணிந்து, அவர்களைப் பல வகையிலும் மகிழ்வித்துக் காத்து வருகிற பிள்ளைகள் வீட்டில் இலட்சுமிதேவி நடமாடுகிறாள். அந்த வீட்டில் சான்றோர்கள், பெரிய மேதைகள், அறிஞர்கள் தோன்றுவார்கள்.

பரமசிவம் தம் தாய் தந்தையைத் துரத்தினார். அதன் விளைவு அவருக்குப் பிறந்த பிள்ளையே கொலைகாரனாக மாறினான். வேலைக்காரனாக இருந்தாலும் என் தந்தை தன் பெற்றோர்களைப் பேணி வளர்த்ததால் இன்று பெரிய தியாகம் செய்ய மனம் வந்தது.

'தந்தை தாய்ப்பேண்' என்பது கசாப்புக் கடை வியாதனுக்கும், தசரத ராமனுக்கும் சொல்லிவைத்ததன்று. நாளுக்கு நாள் கெட்டு வருகிற நமது இளைய சமுதாயத்திற்கு நல்வழி காட்டப் பிறந்த உயர்ந்த கோட்பாடுதான் 'தந்தைதாய்ப் பேண்'என்பதாகும். மாதாவையும், பிதாவையும் தெய்வமாகப் பூஜிப்பவர்கள் வாழ்க்கையில் சிறந்தவர்களாவார்கள். பெற்றோர்களும்பூஜிக்கத்தகுந்தவர்களாக அமைந்துவிட்டால் எல்லா நலன்களும் உண்டாகின்றன என்று வேலாயுதம் பேசி முடித்தான்.

---

# ஹிருதய ஏக்கம்

( சுவாமி ஆத்மானந்தர் )

ஆத்மசாதனத்தில் ஆழ்ந்து ஈடுபடு. உன் மனதை யாண்டும் உன் கைவசத்தில் வைத்திரு. புலன்களைக் கண்டிப்பான கட்டுப்பாட்டின் கீழ் வைத்திரு. புலனடக்கமும் மனவடக்கமும் எவ்வளவுக்கெவ்வளவு கைகூடுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு ஆத்ம ஞானம் உன்னிடம் அதிகரிக்கும். அழிந்து போகும் சிற்றின்ப சுகங்களில் உன்னை ஆழ்த்திக்கொள்ளாதே. பகவத் பக்தியை மேலும் மேலும் வளர்த்துவா. பகவத் தரிசனம் பெறுதற் பொருட்டு நெஞ்சம் நைந்துருகு. பண்டிதனுக வேண்டுமென்று ஆசைப்படாதே. வெறும் பாண்டித்தியம் பகவத்தரிசனத்துக்கு இடையூருகவே முடியும். நூலறிவு உண்மையான ஞானமாகாது. பகவானைப்பற்றிய மெய்யறிவே உண்மை ஞானமாகும். கிரந்தங்களெல்லாம் வெறும் கிரந்திகள் (முடிச்சுக்கள்) என்று ராமகிருஷ்ணர் கூறுவதுண்டு. உபநிஷதம், பகவத் கீதை போன்ற சாஸ்திரங்களையே நீ பயில வேண்டும். பண்டிதனுகவேண்டுமென்ற நோக்கம் எதுவுமின்றி, ஆன்ம ஞானத்தை அடைய வேண்டுமென்ற ஒரே நோக்குடன் அவைகளைப் பயின்றுவா. மனத்தகத்துக் கல்விச் செருக்கு வளர்தற்கு அணுவளவேனும் இடந்தரலாகாது. வித்தையும் வினயமும் உன்பால் சேர்ந்து மிளிரட்டும். ''கற்றறிவார் கண்டது அடக்கம்'' என்பது ஆன்ருேர் வாக்கு. உன்னை நீ மிக உயர்ந்தவனுக எண்ணிக்கொள்ளாதே. அதே போன்று உன்னை மிகவும் தாழ்ந்தவனுகவும் எண்ணிக்கொள்ளாதே. தற்பெருமையைப் போன்றே தாழ்வு மனப்பான்மையும் உனது முன்னேற்றத்திற்கு இடையூறு விளைவிக்கும். உயர்வு, தாழ்வு மனப்பான்மை இரண்டையுமே மனத்தகத்திலிருந்து அடியோடு ஒழித்துவிடு.

நாம் ஆழ்ந்து சாதனத்தில் ஈடுபடுகின்ருேமில்லை. நாம் அடிக்கடி சோம்பலுக்கு ஆளாகின்ருேம். அதிகாலை நேரம் பிராம்ம முகூர்த்தம் எனப்படுகின்றது. அந்நேரத்தில் ஜப தபங்களில் ஈடுபடவேண்டும். சாதனைக்குரிய நேரத்தை உறக்கத்தில் கழித்துவிடுகின்ருேம். நம்மை நாமே உயர்த்திக்கொள்ளச் சிரத்தையில்லாதவர்களாக இருக்கின்ருேம். நம்மிடத்துள்ள குற்றங்குறைகளை நாம் காண்கிருேமில்லை. பிறரது குறைகளைக் காண ஆர்வம் காட்டுகிருேம். பிறரது குறைகளைச் சலியாது பேசுகிருேம். பாரமார்த்திக வாழ்வில் க்ஷீணதசை அடைந்துகொண்டிருக்கும் நாம் அதை முன்னேற்றம் என்று முட்டாள்தனமாக எண்ணிக்கொள்ளுகிருேம். மரணத்தை நோக்கிப் போய்க்கொண்டிருக்கும் நாம் அமரத்துவத்தை நோக்கிப் போவதாகக் கருதுகிருேம். அழவேண்டிய சமயத்தில் சிரிக்கிருேம்; சிரிக்கவேண்டிய சமயத்தில் அழுகிருேம். அடிமைகளாக இருக்கிருேம்; ஆனல் சுதந்திரபுருடர்கள் என்று கர்வம் கொள்ளுகிருேம். அடிமைப் புத்தி படைத்திருப்பவனுக்குச் சுதந்திர மனப்பான்மை வராது. சுதந்திர உணர்ச்சி இல்லாதவிடத்துச் சந்தோஷத்தையும் காணமுடியாது. சுதந்திரம் இருக்குமிடத்தில்தான் மகிழ்ச்சியும் இருக்க முடியும். கூண்டில் அடைக்கப்பட்ட கிளிக்குத் தங்கத்தட்டில் உணவளித்தாலும் அதற்குத் திருப்தியிராது. கூண்டைத் திறந்துவிட்டதும் அது ஓடத்தொடங்குமே யன்றித் தங்கத் தட்டில் பற்றுவைத்துக் கூண்டில் இருக்க விரும்பாது. விடுதலையிலிருந்துதான் ஆனந்தம் உண்டாகின்றது. நாம் விடுதலை பெறவேண்டும். நம்மிடத்திலுள்ள ஆசாபாசங்கள் அனைத்தினின்றும் விடுதலை பெறவேண்டும். இந்திரிய சுகபோகங்கள் அனைத்தினின்றும் விடுதலை பெறவேண்டும். மனக் குரங்குக்கு அடிமைப் பட்டுக் கிடப்பதினின்றும் விடுதலை பெறவேண்டும். சுருங்கக்கூறின் நம் மனத்தையும், உடலையும் வென்று நம்வசப்படுத்த வேண்டும். நம்மை நாமே வெற்றிகொள்ள வேண்டும். வெற்றிகளிலெல்லாம் மிகப்பெரிய வெற்றியாவது நம்மை நாமே வெல்லுதலாகும். தன்னை வென்றவன் தரணியை வென்றவனுகின்ருன். அதே போன்று, தன்னை அறிந்தவன் அனைத்தையும் அறிந்தவனுகின்ருன். தன்னை வெல்லுதலும், தன்னை அறிதலும்தான் வாழ்வின் லக்ஷியமாகும். தன்னைத்தான் அறிகின்ற அளவிற்

குக் கடவுள்பக்தி அதிகரிக்கும். அப்பொழுது கடவுளுக்கும் நமக்கும் இடையிலுள்ள இணக்கத்தை உணருகின்றோம். ''தன்னை அறிந்தால் தலைவன்மேல் பற்றலது பின்னையொரு பற்றுமுண்டோ பேசாய் பராபரமே'' என்பது தாயுமானவர் வாக்கு.

மனதை மலினப்படுத்தக்கூடியது அனைத்தையும் விட்டு விடவேண்டும். நம் உடலையும் உள்ளத்தையும் பலவீனப்படுத்தும் அனைத்தையும் நஞ்செனக் கருதிப் புறக்கணித்துவிடவேண்டும். நாம் படுகின்ற துன்பதுயரங்கள், காமக்குரோதங்கள் அனைத்திற்கும் நம்மிடத்துள்ள பலவீனம்தான் காரணமாகும். தவறுகள் அனைத்தும் பலவீனத்தினின்றே உற்பத்தியாகின்றன. சமுதாயத்தில் நிகழுகின்ற கேடுகள் அனைத்திற்கும் மக்களது மனப்பலவீனமே காரணமாகும். நம்முடைய முன்னேற்றம், சமுதாயத்தினுடைய முன்னேற்றம் அனைத்துமே நம்மைப் பலவான்களாக்கிக் கொள்வதில்தான் இருக்கின்றன. நம்மிடத்து எத்துணையோ குற்றங்குறைகள் இருக்கலாம். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகப் பலவீனம் நம்மீது ஆட்சி செலுத்தியும் இருக்கலாம். ஆயினும் என்ன? அது குறித்து நாம் கவலைப்பட வேண்டியதில்லை. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இருள் மண்டிக்கிடந்த அறையினுள் சிறுவிளக்கொன்றைக் கொண்டு போக வேண்டியதுதான் தாமதம்; இருள் இருந்த இடம் தெரியாமல் உடனே அகன்றுவிடுகின்றது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்த அறையினுள் குடியிருந்தேன் என்று இருள் உரிமை கொண்டாட முன் வராது. ஒளியைப் பார்த்ததும் இருள் மறைந்துவிடும். அதே போன்று பலத்தின் முன் பலவீனம் நிலைத்து நிற்காது. நம்மைப் பலவான்களாகக் கருதவேண்டும். நம்முடைய எண்ணங்களிலும், சொற்களிலும், செயல்களிலும் பலம் திகழவேண்டும். நம்முடைய அங்க அசைவுகள் ஒவ்வொன்றிலும் பலம் வெளிப்படவேண்டும். பலம் பலம் என்பதே நமது மூச்சாயிருக்க வேண்டும். ''பலமே வாழ்வு; பலமின்மையே மரணம்'' என்ற சுவாமிஜியின் திருவாக்கை நாம் யாண்டும் நினைவில் வைத்திருக்கவேண்டும். பலமுடைய எண்ணங்களை எண்ணுவதனல் நம்மிடத்துள்ள பலவீனத்தைத் தகர்ந்தெறிந்து விடலாம். நம்மிடத்துள்ள தீமைகளை எதிர்த்துத் தைரியமாகப் போராடவேண்டும். குற்றங்குறைகளை எதிர்த்துப் போராடுவதில் இன்பம் காணவேண்டும். இடையருத போராட்டம் இறுதியில் நமக்கு வெற்றியைத் தேடித்தரும். இடையரு முயற்சியினலும், பயிற்சியினலும் ஆகாதது ஒன்றுமில்லை. தொடர்ந்து கடைப்பிடிக்கும் நற்பழக்கங்கள் ஏற்கனவேயுள்ள தீய பழக்கங்களைப் போக்கடித்துவிடும். ''நடையும் நடைப் பழக்கம்'' என்பது ஔவையின் வாக்கு. நன்னடத்தையானது தொடர்ந்து கடைப்பிடிப்பதனல் நமக்குச் சொந்தமாகி விடுகிறது. நற்பழக்கங்களையெல்லாம் நமது இயல்பாக்கி விடவேண்டும். நல்லியல்பே வடிவெடுத்தவர்களாக நம்மை மாற்றியமைத்துக் கொண்டு, மலர் மணத்தைப் பரப்புவதுபோன்று நம்மிடத்திருந்து நலமே யாண்டும் வெளிப்பட வேண்டும்.

உட்கொள்ளும் உணவின் தரத்திற்கேற்ப உடல் வளர்ச்சியுறுகிறது. தினமும் நாம் செய்கின்ற ஆத்ம சாதனைக்கேற்ப சாதனத்தில் முன்னேற்றம் நமக்கு வந்து வாய்க்கும். ஏற்கனவே வாழ்ந்த வாழ்விற்கேற்ப தற்போதைய நம்முடைய வாழ்வு அமைந்திருக்கிறது. தற்போது நாம் வாழ்கின்ற வாழ்விற்கேற்ப நமது வருங்கால வாழ்வு வந்தமையும். கடந்த காலம் நம் கைவசத்தில் இல்லை; அது நம்மை விட்டுப் போய்விட்டது. நிகழ்காலம் நம் கைவசத்தில் இருக்கின்றது; அதை வேண்டியவாறு பயன்படுத்தலாம். நிகழ்காலத்தைக் கொண்டு நமது வருங்கால வாழ்வை நம் விருப்பம் போல் அமைத்துக் கொள்ளலாம். நமது வருங்கால வாழ்வு பரிசுத்தமானதாயும், பந்த பாசங்களற்றதாயும் இருக்க வேண்டுமானல் இன்று முதலே நாம் ஆத்ம சாதனத்தில் ஈடுபடவேண்டும். சாதனை என்னும் சாகரத்தில் ஆழ்ந்து மூழ்கவேண்டும். எவ்வளவுக்கெவ்வளவு சாதனத்தில் ஆழ்ந்து மூழ்குகிறோமோ அந்த அளவிற்குப் பாரமார்த்திக வாழ்வில் நம்மை மேன்மைப்படுத்தும் கணக்கற்ற முத்துக்களையும், ரத்தினங்களையும் கண்டறியலாம். அமரத்துவம் என்னும் அமிர்தசாகரத்திலும் மூழ்கித் திளைக்கலாம்.

சாதனம் புரிய விரும்பும் நீ லௌகிகத்தில் கட்டுண்டு கிடக்கும் ஜனங்களுடன் நெருங்கிய இணக்கம் வைத்துக் கொள்ளாதே. அவர்களு டைய சகவாசம் உனக்கு நன்மையை நல்காது. நன்மைக்குப் பதில் தீமையையே விளைவிக்கும். சாது மகாத்மாக்களுடன் நெருங்கிய இணக்கம் வைத்துக்கொள். சத்சங்கம் உன்னைப் பரிசுத் தப்படுத்தும். சத்சங்கத்தில் இணக்கம் கொள்ளுகின்ற அளவிற்குச் சித்த சுத்தி வந்து வாய்க்கும்.

"நிலத்தியல்பால் நீர்திரிந் தற்ருகும் மாந்தர்க்
குத்தம்
இனத்தியல்ப தாகும் அறிவு"

என்பது மறைமொழி. "சாது தரிசனம் பாப விமோசனம்" என்பது பழமொழி. சாதுக் களுக்குப் பணிவிடை செய்வது தெய்வத்திற் குப்பணிவிடை செய்வதற்கு நிகராகும். சாது சேவை உன்னைப் பரமானந்தத்தில் திளைக்கச் செய்யும்.

"அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டு
விட்டால்
இன்பநிலை தானே வந்தெய்தும் பராபரமே"

என்பது தாயுமானவர் திருவாக்கு. அரசி யல் விவகாரங்கள் போன்றவற்றில் ஈடுபடு வது ஆத்மசாதகனுக்கேற்றதன்று. புலனின் பத்தை மிகுதியாக அனுபவிக்க உரிமை கேட் பது அரசியல்; புலனின்பத்தை அடியோடு துடைக்க முற்படுவது ஆன்மீகம். அரசியல் வாழ்வும் ஆன்மீக வாழ்வும் இணைந்திருப்பது ஆரம்ப சாதகர்களுக்கு ஏற்புடையதன்று. சாத கன் பலப் பல துறைகளில் ஈடுபடுவது சாத னத்திற்கு இடையூறு விளைவிக்கும்; மனதைச் சிதறடையச் செய்துவிடும்.

சான்ருேரைப்போன்று பாசாங்கு செய்ய லாகாது. பக்தனைப் போன்று கபடவேடம் தரித்தலாகாது. மகாத்மாக்களைப் போன்று நடிக்கலாகாது. பெரிய காரியங்களைச் சாதிப் பதற்கென்றே சிலர் அவதரிக்கின்றனர். அவர் களைப் போன்று நாமும் செய்ய முற்படுவது அறிவீனமாகும். நம்முடைய சக்தியை முதலில் நாம் அறிந்துகொள்ள வேண்டும். பின்னர் நம் சக்திக்கேற்ற காரியங்களில் ஈடுபடலாம். இயற்றுகின்ற காரியங்கள் அனைத்தையும் இறைபணியாகவே இயற்ற வேண்டும். பொதுப்பட சாதகன், கண்ட கண்ட கருமங் களையெல்லாம் விரித்துக்கொண்டு போக லாகாது. ஆசைவசப்பட்ட கர்மங்கள் மனத் திற்கு அசாந்தியையும், அமைதியின்மையை யும் தரக்கூடும். ஆதலால் உனக்கேற்பட்ட கருமத்தைக் கடவுள் கைங்கரியமாகச் செய். கர்மத்தில் ஈடுபட்டிருக்கும் போதும் கடவுள் சிந்தனையை மறந்துவிடாதே. காரியம் முடிந் ததும் முழு மனதையும் கடவுள்சிந்தனையில் மூழ்கடி. உலகத்தையும், உலகக்கிருத்தியங் களையும், உன்னையுமே மறந்து இறையுணர்வில் திளைத்திரு. அதனுல் அடைகின்ற ஆனந்தம் எல்லையற்ற பரமானந்தமாகும்.

பிறரது வாழ்வையும் செயலையும் கவனியாது யாண்டும் விழிப்புடனிருந்து உன்னையே நீ கவனித்துவா. உன்னுடைய வாழ்வை ஒழுங் குப்படுத்த ஓயாது முயல். பிறருக்குப் புத்தி மதி சொல்ல முற்பட்டு விடாதே. உனக்கு நீயே புத்திமதி சொல்லிக்கொள். பிறர் எப் படி வாழவேண்டுமென்று விரும்புகிருயோ அதன்படி நீயே முதலில் வாழ்ந்துகாட்டு. உன்னுல் முடியாத ஒன்றைப் பிறரைச் செய்யும் படி வற்புறுத்தாதே. வாழ்ந்து காட்டுவதன் மூலம் பிறருக்குப் போதனை செய். ஆயிரம் உபதேசங்களைவிட ஒருசிறிது வாழ்ந்துகாட்டு வது மிக்க பலனைத் தருவதாகும். கேட்டுத் தெரிந்துகொள்வதைவிட மிகுதியாக மனிதன் பார்த்துத் தெரிந்து கொள்ளுகிருன். அதனுல் உனது வாழ்வு உலகிற்கு எடுத்துக்காட்டாய், மற்றவர் பார்த்துப் பின்பற்றத் தக்கதாய் இருக்கட்டும்.

ஜனங்களிடமிருந்து புகழ்ச்சியை நாடாதே. மக்களது புகழ்ச்சிக்கோ இகழ்ச்சிக்கோ அடி மைப்பட்டுவிடாதே. பேர் புகழ் கிடைக்க வில்லையே என்று வருத்தப்படாதே. லௌகிக விஷயங்கள் எதைக் குறித்தும் கவலை கொள் ளாதே. உன் ஆசைகள் கவலைகள் அனைத் தும் ஆண்டவனை அடைவது சம்பந்தப்பட்ட தாகவே இருக்கட்டும். ஆசைப்பட வேண் டின் ஆண்டவனின் அருளைப்பெற ஆசைப்படு. பரிசுத்தம் நிறைந்த பக்தனுகத் திகழ ஆசைப் படு. இறையருள் இன்னும் கிட்டவில்லையே என்று கவலைப்படு. ஆண்டவனைக் குறித்த ஆசையும் கவலையும் உன்னைப் பக்குவப்படுத்

தும். அந்தக்கவலை அருள்தாகம் எனப்பெயர் பெறும். அருள்தாகம் அதிகரிக்குமளவிற்கு இறையருளுக்கு விரைவில் பாத்திரராவோம். அந்த இறையருளாம் பரசுகத்தைத்தான் எல்லாரும் பிரார்த்திக்கின்றனர்.

"தட்டுங்கள் திறக்கப்படும்; கேளுங்கள் கொடுக்கப்படும்; தேடுங்கள் கண்டடைவீர்" என்பது இயேசுநாதர் வாக்கு. மனிதன் மனப்பூர்வமாக எதைத் தேடுகிறானோ அதை அடையப்பெறுவான் என்பதில் ஐயமில்லை. இறைவன் கற்பதரு போன்றவர். வேண்டியதை வேண்டியாங்கு வழங்கவல்லவர். அவர் கருணையின் உறைவிடம். அவர் கருணைக்கு ஈடு இணையேது? நாம் எதைக் கேட்கிறோமோ அதை நமக்கு எடுத்து வழங்குகிறார். நாம் இதுநாள் வரை எதைக் கேட்டோம் என்பதை எண்ணிப் பார்ப்போம்! இப்பொழுதும் இறைவனிடத்து முழுமனதுடன் எதைக்கேட்கிறோம்என்பதைச் சிந்தித்துப்பாருங்கள்! "நெஞ்சை ஒளித்து ஒருவஞ்சகமில்லை" என்பது கோட்பாடு. நெஞ்சார இறையருளைப் பிரார்த்திக்கின்றோமா? கன்றினிக்குச் சேதா கனிந்திரங்கல்போல இறையருளுக்காகக் கசிந்துருகுகின்றோமா? தாயை இழந்த சேயைப்போல் இறையருளை நாடி அழுகின்றோமா? தெய்வப்பித்து தலைக்கேறி உலகத்தவர் பித்தரென்று ஏசுகின்ற பாங்கில் இங்குமங்கும் ஓடுகின்றோமா? ஊணையும் உறக்கத்தையும் மறந்து தூய அருட்பேற்றைத் தொடர்ந்து தேடுகின்றோமா? இதில் எதுவுமே செய்வதில்லை. உண்டு உடுத்து இங்கு உலகத்தவர்போல்தான் நாமும் திரிகின்றோம். இத்தகைய நாம் இறையருளுக்கு எப்படிப் பாத்திரராகமுடியும்? இத்தகைய நாம் பக்தர் அருந்தும் பரமசுகத்தை எப்படிப் பருகமுடியும்? இறையருளைப்பெற்றுப் பக்தர் அருந்தும் பரமசுகத்தைப்பருகவேண்டுமெனின் நாமும் உண்மையான பக்தர்களாக மாறியமையவேண்டும். பரமனையே நினைந்து நினைந்து நெஞ்சம் உருகவேண்டும். இறையருளுக்காக நெஞ்சம் ஏங்கி ஏங்கி நெகிழவேண்டும். கடல் மடைதிறந்து விட்டாற்போன்று நம்மிடத்துள்ள அன்பு அனைத்தையும் அவன்மீது பாய்ச்சவேண்டும். உன்னை நான் மறப்பனோ! மறந்தால் உயிர் தரிப்பனோ என்கின்ற பாங்கில் இறையருளைப்பெறாது நாம் உயிர் வாழவும் விரும்பாதநிலை வரவேண்டும். அப்போது தான் நாம் இறையருளைப்பெறத் தகுதியுடையராவோம். அத்தகுதி எடுத்த எடுப்பில் நமக்கு வந்து வாய்க்காது. அத்தகுதியைப் பெறச் சிறுகச் சிறுக நம்மைப் பக்குவப்படுத்திக் கொள்ளவேண்டும். தினந்தோறும் பக்தியைப் பெருக்கி வரவேண்டும். பகவானை அடையவில்லையே என்ற ஏக்கம் தினந்தோறும் வளர்ந்து வரவேண்டும். அந்த ஹிருதய ஏக்கம் ஒருநாள் நம்மை இறையருளைப் பெறும்படிச் செய்யும். அந்நிலையில் நாம் இறைவனோடு ஒன்றித்துப் பரமானந்தத்தில் திளைத்திருப்போம்.

---

# செய்திகள்

**நிகழ்பவை:**

ஆடி விடுமுறைக்குப்பின் ஸ்ரீ விவேகானந்த வித்யாவன உயர்நிலைப்பள்ளி ஆகஸ்ட் மாதம் 23 ஆம் தேதி அன்று திறக்கப்படும்.

செப்டம்பர் மாதம் 5 ஆம் தேதி வெள்ளிக்கிழமையன்று ஸ்ரீ ஜயந்தியை முன்விட்டு வித்யாவன குருகுல மாணவர்கள் பகல் பன்னிரண்டு மணி நேரம் அகண்டநாம பஜனையும், மாலை 6-30 மணியிலிருந்து 7-30 மணி வரை ஐக்கிய வணக்கமும் செய்வார்கள்.

செப்டம்பர் மாதம் 16-ஆம் தேதி வெள்ளிக்கிழமையன்று விநாயகர் சதுர்த்தி ஆகும். அன்று வித்யாவன குருகுல மாணவர்கள் பகல் பன்னிரண்டு மணி நேரம் அகண்டநாம பஜனையும், நண்பகல் 11 மணியிலிருந்து 12 மணிவரை ஐக்கிய வணக்கமும், மாலை 7 மணிக்கு மேல் மாணவர்கள் குழுக்களாகச் சேர்ந்து விநாயகர் பூஜையும் செய்து, விநாயகர் சதுர்த்தியைக் கொண்டாடுவார்கள்.

செப்டம்பர் மாதம் 25ஆம் தேதி புரசவாக்கம் முத்தையா செட்டியார் உயர்நிலைப்பள்ளியில் தேர்வு நடப்பதால் அன்று அங்கு நடக்க வேண்டிய சென்னை அந்தர்யோகம் 18—9—77 ஞாயிற்றுக்கிழமை அன்று அங்கு நடைபெறும்.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

| | |
|---|---|
| திருவாசகம்-மூன்றாம் பதிப்பு பிரசார விலை | ரூ. 14-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை-பதினொன்றும் பதிப்பு பிரசார விலை | ... 12-00 |
| ஞானயோக விளக்கம் | ... 8-00 |
| ராஜயோக விளக்கம் | ... 8-00 |
| கர்மயோக விளக்கம் | ... 7-00 |
| பக்தியோக விளக்கம் | ... 6-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... 6-00 |
| விவேகானந்த விவரணம் | ... 4-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... 4-00 |
| விவேகானந்த உபநிஷதம் | ... 4-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... 4-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-I | ... 3-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-II | ... 3-50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்சரீ ஆறும் பதிப்பு-பிரசார விலை | ... 2-75 |
| தினசரி தியானம்-பதிமூன்றும் பதிப்பு (பிளாஸ்டிக் உறையுடன்) பிரசாரவிலை | ... 2-75 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் | ... 2-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... 2-00 |
| ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் | ... 2-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... 2-00 |
| தாயுமானவர் இயற்றிய | |
| பரிபூரணானந்தம் ஷை | ... 3-00 |
| கருணாகரக்கடவுள் ஷை | ... 2-00 |
| மௌனகுரு வணக்கம் ஷை | ... 1-50 |
| பரசிவ வணக்கம் ஷை | ... 0-50 |
| விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) | ... 1-50 |
| சந்நியாசி | ... 1-25 |
| பஜனைப் பாடல்கள் | ... 1-25 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... 1-00 |
| இராவணத் தத்துவம் | ... 1-00 |
| சகோதரி நிவேதிதை | ... 1-00 |
| ஹரிச்சந்திரன் (நாடகம்) | ... 1-00 |
| காயத்ரீ | ... 1-00 |
| வாலிமோக்ஷம் (நாடகம்) | ... 1-00 |
| தவப்புதல்வர்கள் (நாடகம்) | ... 1-00 |
| அறம் வளர்த்த நம்பி | ... 0-95 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... 0-80 |
| நன்மக்களைப் பெறுதல் | ... 0-80 |
| தானவீரன் கர்ணன் (நாடகம்) | ... 0-80 |
| பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) | ரூ. 0-80 |
| பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) | ... 0-75 |
| இறை வணக்கம் | ... 0-75 |
| *ஆத்ம சக்தி | ... 0-75 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... 0-75 |
| *மனிதனது நிஜசொரூபம் | ... 0-70 |
| *சக்தி தத்துவம் | ... 0-70 |
| *சிவ தத்துவம் | ... 0-70 |
| பிரஹ்லாதன் (நாடகம்) | ... 0-65 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் | ... 0-65 |
| *ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் | ... 0-60 |
| இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் | ... 0-60 |
| *ஆலய வழிபாடு | ... 0-60 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணஷ்டோத்தர சத நாமாவளி: | ... 0-50 |
| சைவன் யார்? | ... 0-50 |
| *சூரிய நாராயணன் | ... 0-50 |
| *முருகக் கடவுள் | ... 0-50 |
| *விஷ்ணு தத்துவம் | ... 0-50 |
| தெய்வீக மகிமைகள் | ... 0-50 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... 0-40 |
| தபோபலன் (நாடகம்) | ... 0-40 |
| *கணபதி | ... 0-40 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... 0-30 |
| பரசுராமர் கர்வ பங்கம் (நாடகம்) | ... 0-15 |
| The Bhagavad Gita (8th Imp.) | ... 15-00 |
| The Indian National Education | ... 8-00 |
| Sri Lalithambika Sahasranama Stotram | ... 8-00 |
| Ramakrishna Lives Vedanta | ... 5-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... 5-00 |
| Daily Divine Digest (with plastic-cover) | ... 4-50 |
| Mahabharata (with plastic cover) | ... 4-50 |
| Ramayana (do) | ... 4-00 |
| The Man Making Message of Vivekananda (with plastic cover) | ... 3-00 |
| The Bhagavad Gita (Small Size) (With plastic cover) | ... 3-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... 2-50 |
| Holy Bible—In the Light of Vedanta | ... 1-50 |
| *Introducing the Gita | ... 1-50 |
| *Key to Higher Life | ... 0-75 |
| *The Teacher | ... 0-60 |
| *The Student | ... 0-45 |

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபாற் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-00ம் மஞ்ஜரீக்கு ரூ. 2-40ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-20ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.

*இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை–639 115, திருச்சி Dt.

தாயுமானவர் இயற்றிய

# பரிபூரணானந்தம்






Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Yogananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.